# கமகம...... கணக்கு! உங்களுக்காகவே!

12-3+4 = ?

12÷2-2 = ?

4x2-6+2 = ?

36-24÷3 = ?

5+8-1÷4 = ?

8x6÷12 = ?

9+9-2÷2 = ?

7x4-12 = ?

MAHE..



இதில் சந்தனமரம் எது என்று தெரியாமல் விழிக்கிறாள் சின்னுக்குட்டி. ஒரு ரகசியம் - மரங்களின் மீது கணக்குப் புதிர்கள் உள்ளதல்லவா? அவற்றுக்கு விடை கண்டு பிடியுங்கள். 4 என்ற எண்ணை விடையாகக் கொண்ட மரங்கள் மட்டுமே சந்தன மரங்கள். சின்னுக்குட்டிக்கு உதவி செய்வீர்களா?

## சரி, 4 என்ற எண்ணுக்கும் சந்தனத்திற்கும் என்ன சம்பந்தம்?

இதோ:
4 மைசூர் சாண்டல் சோப்
வாங்கினால்
2 பந்துகள் இலவசம்




★ இலவசம்

★ இந்தச் சலுகை தமிழ்நாட்டில் சரக்குகள் தீரும் வரை மட்டுமே - விரைவீர்

சுத்தத்திற்கும் சுகாதாரத்திற்கும் மைசூர் சாண்டல் சோப்

சந்தனத்தின் நற்குணத்தை கடந்த 80 வருடமாக உங்கள் இல்லத்துக்குக் கொண்டு வருகிறது மைசூர் சாண்டல் சோப்.

A 
ACTIVE

B  
BUZZ BOSS

C 
CADET DX

D 
DEVIL DX

E 
ELEPHANT

F 
FISH

G 
GIRAFFE

H 
HEN

I 
INSECT

J 
JOKER

K 
KIDD DX

L 
LI'L ANGEL
LAMBADA LIMBO

M 
MISSILE MISS INDIA Jr

N 
NEST

O 
ORANGE

P 
PIRANHA

Q 
QUEEN Jr

R 
ROBO COP

S 
SPARKY SALSA

T 
TERMINATOR




V W

**The largest range of kids bikes**
**HERO CYCLES**
THE ABC OF CYCLING



இந்தியப் பண்பாடு-வரலாறு

47



முனிவரின் சாபம்

19



மாயாஜால மலை

11



விநாயகர்

51

## பொருளடக்கம்






SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandmama India Ltd.***
**to**
**Subscription Division**
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**
இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத்தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ 900
இந்தியாவிற்குள் ரூ 120
**புக்போஸ்டில்**
உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணி யார்டரிலோ சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்கரபாணி

# இந்த நூற்றாண்டின் சொற்கள்

சுற்றுப்புறச் சூழலையும் மனிதர்களின் உடல் நலனையும் பாதிக்கும் கிருமிகளைப் பற்றி நாம் அடிக்கடி கேள்விப்படுகிறோம். இக்கிருமிகள் இயற்கையின் பகுதிகளான நீர், காற்று, நிலம் என்பனவற்றாலும் மிருகங்களாலும் தாவரங்களாலும் பரப்பப்படுகின்றன. இக்கிருமிகளைக் கட்டுப் படுத்த விஞ்ஞான ரீதியில் நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டு வருகின்றன.

ஆனால் 'குறிக்கோள்' என்ற வகைக் கிருமிகள் இப்போது மனித அறிவைத் தாக்கி வருகின்றன. தற்போது குறிக்கோள்கள் அரசியல் ரீதியில் தான் பெரும்பாலும் அமைந்து கட்சிகள், நாடுகள் என்பனவற்றை ஆட்டு விக்கின்றன. ஏதோ ஒன்றை அடையக் குறிக்கோள் எனச் சிலர் கூறுகிறார் கள். ஆனால் அது மக்கள் நலனுக்கு உகந்ததா என்று அவர்கள் சிந்தித்துப் பார்ப்பதில்லை.

பயங்கரவாதத்தை எடுத்துக் கொண்டு பாருங்கள். குறிக்கோளை அடைவோம் எனக் கூறிக் கொண்டு ஆரம்பமாவது வன்முறைகளில் தான் போய் முடிகிறது. இது குறிக்கோளை அடைவதே அல்ல. உலகின் பல பகுதிகள் பயங்கரவாதத்தால் மிகவும் மோசமாக பாதிக்கப்பட்டு வருகின்றன. இதற் குக் காரணம் அறிவு பாதிக்கப்பட்டதே ஆகும். இதனால் இன்னல்களுக் கும் துயரங்களுக்கும் ஆளாகிறவர்கள் அப்பாவி மக்களே.

நாம் இருபத்தொன்றாவது நூற்றாண்டில் இருந்தபோதிலும் அடிக்கு அடி, உதைக்கு உதை என்று கூறும் பழம் சொற்களை விடாமல் கூறுகி றோம். இவற்றை விட்டொழித்து அன்பு, கருணை, இரக்கம் என்ற சொற் களைச் சொல்லிலும் செயலிலும் இந்த நூற்றாண்டில் நாம் மிகமிக அதிக மாக பயன்படுத்திக் காட்டி எல்லா மக்களின் நலனைப் பாதுகாப்போம் என உறுதி கொள்வோம்.

---

ஆசிரியர்: **விஸ்வம்**



இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்

# இந்திய மாவீரர்கள்–5

இந்திய சுதந்திரப்போர் பல மாவீரர்களை வெளியே கொண்டு வந்தது. அவர்களில் சிலரைப் பற்றி வினாக்கள் இவை. இவர்களைக் கண்டு பிடியுங்கள்.

முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்*



1. இவர் இந்திய தேசிய ராணுவத்தை நிறுவினார். இவர் பற்றி வேறு குறிப்புகள் தேவை இல்லை. இவர் யார்?

---------------------------------------------

2. இவர் கடல் கடந்த வீரர் என அறியப்பட்டவர். தமிழ் நாட்டைச் சேர்ந்த இவர் ஆங்கிலயர்களை எதிர்த்துத் தம் சொந்தக்கப்பல் நிறுவனத்தை நடத்தியவர். இவர் யார்?

---------------------------------------------

3. இவர் தம் சிறுவயதில் ஒரு புலியைக் கொன்று இந்தப் பட்டம் பெற்ற விடுதலைப்போர் வீரர். இவர் யார் தெரியுமா?

---------------------------------------------

4. ஆங்கிலேயரை எதிர்த்துப்போராட இவரும் இவரது நண்பர்களுடன் பாஜ் நகர் ரயில் நிலயத்தில் ரயில் வண்டியை நிறுத்தி பொக்கிஷப் பெட்டியைக் கவர்ந்தவர். இவர் யார்?

---------------------------------------------

5. இவர் நானாசாகிப்பின் படையை நடத்திச் சென்று ஆங்கிலேயரிடமிருந்து கான்பூரைக் கைப்பற்றினார். 1857 புரட்சியில் இவர் ஜான்சி ராணி குவாலியரைக் கைப்பற்றிக் கொள்ள உதவினார். இவர் யார்?

---------------------------------------------

ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐவரில் உங்களுக்கு பிடித்தமான தேசியமாவீரர் யார் என்றும் அதற்கான காரணங்களை பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த தேசிய மாவீரர் ..................................

..................................................................

..................................................................

போட்டியாளரின் பெயர்: ..................................

வயது: .................. வகுப்பு: ..................

முகவரி: ..................................................

..................................................................

பின்கோடு: .................. போன்: ..................

போட்டியாளரின் கையொப்பம்: ..................

பெற்றோரின் கையொப்பம்: ..................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்

**இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி-5**
**சந்தமாமா இந்தியா லிமிடெட்**
நெ. 82. டிஃபென்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097
அனுப்ப வேண்டிய கடைசித் தேதி மார்ச் 5, 2002

**நிபந்தனைகள்:**

1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்ட சிறார்களுக்கு மட்டுமே.
2. *எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார் களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப் படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன் கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.

இப்பரிசுகளை உங்களுக்கு அளிப்பவர்கள்





# குடும்பமே மேல்!

ஆண்டிமடம் என்ற ஊரில் ஆவுடையப்பன் என்ற ஏழை தன் மனைவியுடனும் இருமகன்களுடனும் தன் வயதான தாயாருடனும் வசித்து வந்தான். அவன் எவ்வளவு சிரமப்பட்டாலும் அவனால் அதிகம் சம்பாதிக்க முடியவில்லை. அதனால் அக்குடும்பத்தவர்கள் வயறு நிறையச் சாப்பிட முடியவில்லை. அவனால் குடும்பத்தைக் காப்பாற்ற முடியாது போனதால் சன்னியாசியாகி விட எண்ணி ஒரு நாள் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் சன்னியாசிகள் வாழும் காட்டிற்குச் சென்றான்.

அங்கு செல்கையில் வழியில் ஒரு பணப்பை அவனுக்குக் கிடைத்தது. அதை அவிழ்த்துப் பார்த்தபோது அதில் தங்க நாணயங்களும், வெள்ளி நாணயங்களும் இருப்பதைக் கண்டு அவன் ஒரேயடியாக மகிழ்ந்து போனான். அதைக் கொண்டு கவலையில்லாமல் வாழலாம் என எண்ணி அவன் வந்த வழியே திரும்பினான். அப்போது ஒரு குரல் ''ஏய்! நில்'' என்று அதட்டியது. ஆவுடையப்பன் குரல் வந்த திசையில் பார்த்தபோது இரண்டு முரடர்கள் கையில் கத்தியுடன் வருவது கண்டு நடுங்கிப் போனான்.

அவர்களில் ஒருவன் ''அடே! நாங்கள் கஷ்டப்பட்டுத் திருடி வந்த பணப் பைகளில் ஒன்றை இங்கு தவறவிட்டு விட்டோம். அது இது தான். நீ சிரமப் படாமல் இந்தப் பணத்தை எடுத்துக் கொண்டு போக நினைக்கிறாயா? அது தான் நடக்காது'' என்று கூறி அந்தப் பணப்பையை அவனிடமிருந்து 'வெடுக்' கென்று பிடுங்கிக் கொண்டான்.

ஆவுடையப்பன் நடுங்கியவாறே ''ஐயா! இது உங்கள் பை என்பது எனக்குத் தெரியவில்லை. நான் என்

கி. சுதா

குடும்பத்தவரைக் காப்பாற்ற வழி தெரியாமல் சன்னியாசியாகி இந்த காட்டிலுள்ள சன்னியாசிகளோடு சேர்ந்து விடலாம் என்று எண்ணியே இங்கு வந்தேன். வழியில் இந்தப் பணப்பை கிடைக்கவே கடவுள் எனக்குக் கருணைகாட்டி இதை அளித்தார் என்று தவறுதலாக எண்ணி விட்டேன்'' என்றான்.

அதைக் கேட்ட அந்த இரண்டு திருடர்களும் பலமாகச் சிரித்தார்கள். அவர்களில் ஒருவன் ''உன் ஏழைமையைப் போக்கக் கடவுள் ஒன்றும் பணத்தைத் தூக்கிக் கொடுத்து விடமாட்டார். வேண்டுமானால் நீயும் காட்டிலுள்ள சன்னியாசிகளோடு சேர்ந்து பிச்சை எடுத்து வயிற்றை நிரப்பிக் கொள். சன்னியாசியானாலும் கஷ்டப்பட்டுத்தான் ஆக வேண்டும்'' என்றான். அதன் பின் அத் திருடர்கள் போய் விட்டார்கள்.

ஆவுடையப்பனும் அப்போது ''சன்னியாசியானாலும் கஷ்டப்பட வேண்டுமா? அப்படியானால் வயலில் வேலை செய்தும், தோட்டத்தில் காய்கறிகள் போட்டும் என்னால் பணம் சம்பாதிக்க முடியுமே. அதைக் கொண்டு என் மனைவி மக்களையும் தாயாரையும் எப்படியாவது சிரமப்பட்டுக் காப்பாற்றுகிறேன்.'' என எண்ணித் தன் வீட்டிற்கு வந்து சேர்ந்தான்.

அவன் வந்ததைக் கவனித்த அவனது தாயார் ''ஏண்டாப்பா! எங்கே போனாய்? என்ன நடந்தது?'' என்று கேட்டாள்.

அவனும் தான் காட்டிற்குப் போன காரணத்தையும் அங்கு திருடர்கள் கூறியதையும் விவரமாகச் சொன்னான்.

அதைக் கேட்டு அவனது தாயார் ''நல்ல வேளை. கடவுள் உனக்கு நல்ல புத்தியைக் கொடுத்து உன்னை வீட்டிற்கே திருப்பி அனுப்பிவிட்டார். கஷ்டமோ நஷ்டமோ குடும்பத்தோடு வாழும் மகிழ்ச்சி சன்னியாசி ஆகி வாழ்வதில் இல்லை'' என்றாள்.

ஆவுடையப்பனும் ''நீ சொல்வது நூற்றுக்கு நூறு உண்மை'' எனக் கூறி தலைகுனிந்து நின்றான்.



# பயம் பறந்தது!

காட்டில் ஒரு முயல் அங்கும் இங்கும் அலைந்து திரிந்து சேறு நிறைந்த ஒரு குட்டைக்குள் கால் தவறி விழுந்துவிட்டது. அதில் தண்ணீர் அதிகமாக இல்லாததால் அது மூழ்கி இறந்துவிடவில்லை. ஆனால் சேற்றில் அதன் கால்கள் புதைந்து விட்டன. என்ன முயன்றும் அது குட்டையிலிருந்து வெளியே வர முடியவில்லை. அச்சமயத்தில் இரு முயல்களும் ஒரு குரங்கும் அக்குட்டையின் பக்கமாக வந்தன. அவை குட்டையில் சிக்கிய முயலைப் பார்த்து அதைக் காப்பாற்ற எண்ணி அதைப் பிடித்து இழுத்தன.

அவை மிகவும் முயன்று பார்த்தும் குட்டையிலிருந்த முயலைக் கரைக்கு இழுத் துக் காப்பாற்ற முடியவில்லை. முடிவில் அவை அந்த முயலிடம், ''நாங்கள் உன்னைக் காப்பாற்ற முயன்றும் எங்கள் முயற்சி வீணானதே!'' எனவே, அந்த முயலும் ''இது என் தலைவிதி. நான் அனுபவிக்கிறேன். நீங்கள் என்ன செய்வீர்கள்? இனி உங்கள் வேலையைப் பாருங்கள்'' என்றது. அவை மூன்றும் அந்த முயலைக் குட்டையிலேயே விட்டுவிட்டுச் சென்றன.

அதற்குச் சற்று நேரத்திற்குப் பிறகு ஒரு நரி அந்தக் குட்டையின் பக்கம் வந்தது. அது முயலைப் பார்த்து உறுமவே, முயல் அந்த நரி தன்னைக் கொன்றுவிடுமோ எனப் பயந்து, தன்னைக் காப்பாற்றிக் கொள்ள ஒரு துள்ளு துள்ளியது. மறுவினா டியே அதன் கால்கள் சேற்றிலிருந்து விடுபடவே, அது கரையில் குதித்து சிட்டாய்ப் பறந்து ஓடியது. கொஞ்ச தூரம் ஓடியதும், அது தன்னைக் குட்டையிலிருந்து காப்பாற்ற முயன்ற இரு முயல்களையும் குரங்கையும் சந்தித்தது.

அவை மூன்றும் முயலைக் கண்டு ஆச்சரியப்பட்டு, ''நீ எப்படி அந்தக் குட்டை யிலிருந்து வந்தாய்?'' என்று கேட்டன. அந்த முயலும், ''என்னைக் கொல்ல ஒரு நரி உறுமிக் கொண்டு வந்தது. நான் பயந்து போய் என்னைக் காப்பாற்றிக் கொள்ள ஒரு துள்ளு துள்ளினேன். சேற்றிலிருந்து விடுபட்டேன். பயம் பறந்தோடிவிட்டது. கரையில் குதித்துத் தப்பிவிட்டேன். தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள ஒருவன் என்ன வேண்டுமானாலும் செய்யத் தானே செய்வான்!'' என்றது!



ORISSA
The soul of India

## உங்களுக்கான புதிர் வினாக்கள்

# கோராபட்

இயற்கையை ரசிப்போர் கோராபட்டைப் பெரிதும் விரும்புவார்கள். இந்த மாவட்டமே இயற்கை எழிலைக் கொண்டது. கோராபட் தண்டகாரணியவனத்தில் கடல் மட்டத்திற்கு மேல் 2990 அடி உயரத்தில் உள்ளது.

கோராபட் மாவட்டத்திலுள்ள ஜெய்பூர் ஒரு வணிகமையமாகும். இதனருகேயுள்ள நீர்வீழ்ச்சியும் வனங்களும் கண்குளிர் காட்சி தருபவை. வன விலங்குகள் அதிகம் உள்ளவை. ஜெய்பூரிலிருந்து பல சுற்றுலாத் தலங்களுக்குச் செல்ல முடியும்.

ஜெய்பூரிலிருந்து 70 கி. மீ தொலைவிலுள்ள துதுமா என்ற நீர்வீழ்ச்சி பார்க்கப் பரவசமூட்டுவது. இது மச்சகுண்ட நதியால் ஏற்பட்டதாகும். மற்றொரு சுற்றுலாத்தலம் குப்தேஸ்வர். இங்குள்ள குகைக் கோவிலில் சிவபிரான் குப்தேஸ்வரராக இருக்கிறார். இது ஜெய்பூரிலிருந்து 58 கி. மீ தொலைவில் உள்ளது.

பெர்ஹாம்பூரிலிருந்து கோராபட் போகும் வழியில் ராயகடா என்ற ஊர் உள்ளது. இதே பெயரை இதன் மாவட்டமும் கொண்டுள்ளது. இங்கும் இயற்கைக் காட்சிகள் கண்ணைக் கவரும். 134 கி. மீ தொலைவிலுள்ள மினஜ்ஹோலா என்பது மூன்று நதிகள் சேருமிடத்திலுள்ள புனிதத்தலம். இங்கும் இயற்கையின் அழகைக் காணலாம். கோராபட் பகுதியில் மலைச் சாதியினர் பிரிவுகள் பல உள்ளன.

---

**உங்களுக்கான புதிர் வினாக்கள்**

**(14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டும்)**

## போட்டி—VI

1. ஆகாய விமான யந்திரங்களின் தொழிற்சாலை கோராபட் மாவட்டத்தில் பசுமை நிறைந்த பள்ளத்தாக்கில் அமைந்துள்ளது. அது எந்த இடம்?

---------------------------------------------

2. நால்கோ எனப்படும் ஆசியாவின் மிகப்பெரிய அலுமினியம் தயாரிக்கும் நிறுவனம் கோராபட்டருகே அமைந்துள்ளது. அந்த இடத்தின் பெயர் என்ன?

---------------------------------------------

3. நாகேவல்லி நதியில் இரு அழகிய நீர் வீழ்ச்சிகள் உள்ளன. இங்கு இரு விசித்திர வடிவுப்பாறைகள் உள்ளன. அந்த இடம் எது?

---------------------------------------------

உங்கள் விடைகளைத் தெளிவாக அவற்றிற்காக விடப்பட்ட இடங்களில் எழுதி இந்தக் கூப்பனைக் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பவும்

**Orissa Tourism Quiz Contest**
**Chandamama India Limited**
**No.82, Defence Officers Colony**
**Ekkatuthangal, Chennai - 600 097**

பெயர் : ..........................................

வயது : ..........................................

முகவரி : ..........................................

..........................................

பின்கோடு............ போன் ............




Winners picked by Orissa Tourism in each contest will be eligible for **3 days, 2-night** stay at any of the **OTDC Panthanivas**, upto a maximum of four members of a family. Only original forms will be entertained. The competition is not open to CIL and Orissa Tourism family members. Orissa Tourism, Paryatan Bhaven, Bhubaneswar-751 014. Ph: (0674) 432177, Fax : (0674) 430887, e-mail : ortour@sancharnet.in. Website : Orissa-tourism.com




## 13

(ஜீவதத்தனும் கஜவர்மனும் மணிபூஷணன் கரையில் சேர்த்த படகிலிருந்து இறங்கினார்கள். அப்போது ஒரு ராட்சஸி அங்கு வரவே, ஜீவதத்தன் அவளிடம் பேசி அவளது கணவனைச் சந்தித்து மாயாஜால மலை பற்றிப் பல விஷயங்களைத் தெரிந்து கொண்டான். நள்ளிரவில் மணிபூஷணன் தூக்கத்தில் ராட்சஸர்கள் வந்து விட்டார்களென்று உளறினான். அப்போது-)

மணிபூஷணன் உளறுவதைக் கேட்ட ஜீவதத்தனின் தூக்கம் கலைந்தது. கஜவர்மன் மணிபூஷணனை உலுக்கி எழுப்பி ''மணிபூஷணா! பயத்தால் ஏன் உளறுகிறாய்? இங்கு வந்த ராட்சஸர்களிடம் நீ மணிரஞ்சிதன் இல்லை என்று கூறி அவர்களை அனுப்பி விட்டேன்'' என்றான். மணிபூஷணனும் பயம் தெளிந்தானாயினும் அதற்குப்பின் தூங்க வில்லை. காலையானதும் மூவரும் படகில் ஏறிப் பயணத்தைக் தொடங்கினார்கள்.

சற்று நேரத்திற்குப் பின் மணிபூஷணன் படகை ஓரிடத்தில் கரை ஓரமாக நிறுத்தினான். அது ஒரு படகுத்துறை போலத் தென்பட்டது. மணிபூஷணன் படகிலிருந்து கரையில் இறங்கி ''அதோ தெரிவது தான் மாயாஜாலமலை. இனி நீங்கள் இறங்குங்கள். எங்கள் தலைவர் மணிரஞ்சிதர் வந்து கொண்டிருக்கிறார் பாருங்கள்'' என்றான். ஜீவதத்தனும் கஜவர்மனும் படகிலிருந்து இறங்கி முதலில் மாயாஜால மலையை உற்று நோக்கினார்கள். பிறகே மணிபூஷணன் கூறிய மணிரஞ்சிதன் வந்து கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். அவன் யட்சன் இளம் வயதினன். அவன் கையில் ஒரு கதாயுதம் இருந்தது.



மணிபூஷணன் ஜீவதத்தனையும் கஜவர்மனையும் கூட்டிக் கொண்டு போய் மணிரஞ்சிதனின் முன்னால் நின்றான். மணிரஞ்சிதன் அவ்விரு வரையும் கூர்ந்து பார்த்து "அட பாவமே! இவர்கள் விதி இங்கே இவர் களைக் கொண்டு வந்து தள்ளி இருக் கிறது. இது இவர்களது துடுக்குத் தனத்தின் பலன்" என்று என்று கூறிக் கொக்கரித்தான்.

ஜீவதத்தனும் கஜவர்மனும் அவனை ஏற இறங்கப் பார்த்து விட்டு பலமாகச் சிரித்தார்கள். ஜீவதத்தனோ "மணிரஞ்சிதா! இங்கே உள்ள கல் தேரை நகர்த்துபவனே மாவீரன் என அரசகுமாரி பத்மாவதி எண்ணுகி றாள். கல்தேரை நகர்த்த வருபவர் களை எல்லாம் நீ பிடித்துத் துன் புறுத்தி அடைத்து வைத்திருக்கிறாய். உன் திட்டம் நிறைவேறாது. நீ தான் ஆபத்தில் மாட்டிக் கொள்ளப் போகி றாய். அது சரி, நீ கவர்ந்து வந்த அரச குமாரிகள் பத்மாவதியும் வசந்த குமாரியும் எங்கே? கல்தேரைக் காட்டு" என்றான்.

இதைக் கேட்டு கோபம் கொண்ட மணிரஞ்சிதன் தன் கதாயுதத்தை உயரத் தூக்கினான். அது கண்டு கஜவர் மன் தன் வாளை எடுத்து "கதையைக் கீழே போடு. முதலில் கல்தேரைக் காட்டு. அதை நாங்கள் நகர்த்துகி றோமோ அல்லது இல்லையோ என்பதைப் பார்த்துவிட்டு நீ கதை யைத் தூக்கு. அதற்கு முன் அவசரப் பட்டு ஏதாவது செய்ய முற்பட்டால் அதன் பலனை நீ அனுபவிப்பாய்" என்று எச்சரித்தான்.

வாளோடு நிற்கும் கஜவர்மனைக் கண்டு மணிரஞ்சிதன் தன் கதையைக் கீழே தாழ்த்தி அவர்களை அழைத்துக் கொண்டு கல்தேர் இருந்த இடத்திற்கு சென்றான். அந்தத் தேர் இருந்த இடத் திலிருந்து சில அடிகள் இரு தேர் வடிவ மாளிகைகள் இருந்தன. அவற்றில் ஒன்றின் மேல் தளத்தில் இரு பெண்கள் நின்று ஜீவதத்தனை யும் கஜவர்மனையும் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ஜீவதத்தன் அவர்களைப் பார்த்து விட்டு மணிரஞ்சிதனிடம் "அவர்கள் இருவரும் தான் நீ கவர்ந்து வந்த அரசகுமாரிகளா?" என்று கேட்டான். மணிரஞ்சிதனும் "ஆமாம். நீ கல் தேரை நகர்த்திவிட்டு வரும் போது உனக்கு மலர்மாலை போட்டு வர

வேற்கப்போகிறார்களோ?'' என்று கேலியாகக் கூறிச் சிரித்தான். பிறகு அவன் ''இனி நீ போய் கல்தேரை நகர்த்தலாமே'' என்றான்.

ஜீவதத்தன் அந்தத் தேரைப் பார்த்தான். இருபது அடி உயரமுள்ள அது தானே முளைத்து வரவில்லை என்பதையும் ஒரு பெரிய பாறை உருட்டிக் கொண்டு வரப்பட்டு அந்தத் தேர் உருவாக்கப்பட்டுள்ளது என்றும் அவன் தெரிந்து கொண்டான். மணிரஞ்சிதனோ ஏதோ நினைத்துக் கொண்டு ''மணிபூஷணா'' என்று குரல் கொடுத்தவாறே சுற்றிலும் பார்த்தான். ஆனால் மணிபூஷணனை எங்கும் காணாமல் திகைத்தான். பிறகு கல் தேரினருகே போய் அவன் நின்றான்.

ஜீவதத்தன் கஜவர்மனை அழைத்து ''இந்தக் கல்தேரின் அடியில் சிறு சிறு இடை வெளிகள் இருப்பதைப் பார். கவனமாகக் கேட்டால் இதன் அடியில் பல குரல்கள் பேசுவதும் நமக்கு நன்கு கேட்கிறது'' என்றான்.

கஜவர்மனும் ''இதற்கு அடியில் வைரச்சுரங்கங்கள் இருக்கின்றவோ? அவற்றை வெட்டி எடுக்கும் பணியில் பலர் ஈடுபடுத்தப்பட்டிருக்கிறார்கள் போலிருக்கிறது'' என்றான்.

அவர்கள் பேசிக் கொண்டதைக் கேட்ட மணிரஞ்சிதன் ''வைரமா? எங்கே? யார் வெட்டி எடுக்கிறார்கள்?'' என்று எதுவுமே தெரியாதவன் போலக் கேட்டான். ஜீவதத்தன் கடுமையாக ''நடிக்காதே. எங்களுக்கு எல்லாம் தெரியும்'' என்றான். மணிரஞ்சிதன் ''ஓகோ! அந்த மணி



பூஷணன் தான் இதையெல்லாம் உங்களிடம் சொல்லி இருக்க வேண்டும்'' என்றான் முகத்தைச் சுளித்துக் கொண்டே.

ஜீவதத்தன் சிரித்தவாறே ''பாவம் மணிபூஷணனை அநாவசியமாக ஏன் சந்தேகிக்கிறாய்? அவன் உன் வேலைகளைச் செய்பவன். அவனிடம் இது பற்றி எல்லாம் கேட்டால் சொல்லி விடுவான் என்று நான் எதிர் பார்க்கவில்லை. நானே என் ஞான திருஷ்டியால் இந்த மாயாஜால மலை பற்றிய ரகசியங்களை எல்லாம் தெரிந்து கொண்டேன். இம்மாதிரி விஷயங்களுக்கு எல்லாம் நான் யாருடைய உதவியையும் நாட மாட்டேன்! அதைத் தெரிந்து கொள்'' என்றான்.

மணிரஞ்சிதனோ ''அடேயப்பா! உனக்கு அப்படிப்பட்ட சக்தி எல்

லாம் இருக்கிறதா? நீ உன் பெருமையைத் தம்பட்டம் அடித்துக் கொள்ளாதே. வந்த வேலையைக் கவனி. இதோ கல்தேர். அதை நகர்த்தி உன் வீரத்தைக் காட்டு. அதைப் பார்க்க அந்த அரசகுமாரிகள் வெகு நேரமாகக் காத்துக்கொண்டிருக்கிறார்கள்'' என்றான் கேலிச் சிரிப்புடன்.

ஜீவதத்தன் கஜவர்மனுக்கு ஜாடை காட்டிவிட்டு மணிரஞ்சிதனிடம் ''அந்த இரு கட்டடங்களில் ஒன்றில் அரசகுமாரிகள் பத்மாவதியையும் வசந்தகுமாரியையும் தங்க வைத்திருக்கிறாய். மற்றது நீ வசிக்கும் மாளிகையா?'' என்று கேட்டான். மணிரஞ்சிதன் கோபம் கொண்டு ''அது யாருடைய மாளிகையாக இருந்தால் உனக்கென்ன? உன் வேலை இந்தக் கல் தேரை நகர்த்துவது. முதலில் அதைச் செய்பார்க்கலாம். வேண்டாத கேள்வி எல்லாம் கேட்டுக் கொண்டிருக்காதே'' என்றான்.

ஜீவதத்தன் நிதானமாக ''கோபப் படாதே தம்பி! நான் அந்த மாளிகை பற்றிக் கேட்பது ஒரு விஷயத்திற்காகத் தான். ஏனென்றால் அந்த மாளிகை இடிந்து விழுந்து தரை மட்டமாகப் போகிறது. அதை நீ காப்பாற்ற முடியாது என்பதைத் தான் கூற வந்தேன். இப்போது பார்'' என்று கூறித்தன் மந்திரத்தடியால் கல் தேரின் மீது ஓங்கி அடித்தான். அந்தக் கல் தேர் வேகமாக உருண்டு போய் மணிரஞ்சிதனின் மாளிகையைத்தாக்கியவாறே மலையிலிருந்து ஆழமான பள்ளத்தில் விழுந்தது.

மணிரஞ்சிதனின் மாளிகை தூள் தூளாகிப் பள்ளத்தில் விழுந்தது. அந்த மாளிகை இருந்ததே தெரியாமல் தரை மட்டமாகி விட்டது.



அதைக் கண்ட மணிரஞ்சிதன் கற்சிலை போல நின்றான். மறு வினாடியே அவன் சமாளித்துக் கொண்டு ஜீவதத்தனைத்தாக்கத் தன் கதையைத் தூக்கினான். அதற்குள் கஜவர்மன் தன் வாளால் அவனது செயலைத் தடுத்தான்.



ஜீவதத்தன் அது கண்டு மகிழ்ந்து தனக்கு கந்தர்வக் கன்னி வசுமதி கொடுத்த வெண்கல சேகண்டியை பலமாக அடிக்கலானான். அப்போது கல்தேர் போனதால் தரையில் ஏற்பட்ட இடைவெளி வழியாக பல கந்தர்வர்களும் ராட்சஸர்களும் வெளியே வந்தார்கள். அவர்கள் மகிழ்ச்சியுடன் ஆடிப்பாடிக் கூத்தாடலானார்கள்.

ஜீவதத்தன் அவர்கள் அமைதியாக இருக்க வேண்டும் எனக் கூறி "இவ்வளவு நாட்களாக நீங்கள் எல்லோரும் இங்கு அடிமைகளாக இருந்தீர்கள். இனிமேல் நீங்கள் சுதந்திரமாக எங்கு வேண்டுமானாலும் போகலாம். நீங்கள் முதலில் உங்கள் உறைவிடத்திற்குப் போய் உங்கள் உறவினர்களையும் நண்பர்களையும் சந்தியுங்கள்" என்றான்.

பிறகு கந்தர்வர்களிடம் "உங்கள் பகுதியில் வாழும் கந்தர்வக்கன்னி வசுமதியிடம் இந்த வெண்கல சேகண்டியை நான் திருப்பிக் கொடுத்துவிட்டதாகக் கூறி ஒப்படைத்து விடுங்கள்" எனக் கூறி சேகண்டியை ஒரு கந்தர்வனிடம் கொடுத்தான்.

அதை வாங்கிக் கொண்ட கந்தர்வன் கண்களில் ஒத்திக் கொண்டான். ஜீவதத்தன் விடுபட்ட கந்தர்வர்களுக்கும் ராட்சஸர்களுக்கும் மேலும் ஏதோ சொல்ல முயன்ற போது மணிரஞ்சிதன் ஐயோ என அலறினான். ஜீவதத்தன் என்ன நடந்தது எனப் பார்த்த போது கஜவர்மன் மணிரஞ்சிதனைத் தன் வாளால் தாக்கி அவனை வீழ்த்தி அவனது மார்பின் மீது தன் காலை பலமாக ஊன்றி அவன் கழுத்தின் மீது வாளை வைத்திருந்தான்.

ஜீவதத்தன் அதனைப் பார்த்து மகிழ்ந்து போனான். அப்போது கஜவர்மன் "ஜீவா! அரசகுமாரிகளை அபகரித்து வந்த இவனை இப்போதே கொன்று விடட்டுமா அல்லது போனால் போகட்டும் என்று விட்டுத் தொலைக்கவா?" என்று கேட்டான்.



இதே சமயத்தில் பத்மாவதியும் வசந்தகுமாரியும் அங்கு வந்தார்கள். வசந்தகுமாரி கீழே கிடந்த மணி ரஞ்சிதனை வெறித்துப் பார்த்து விட்டு "இந்தக் கயவனைக் கொல்லும் வீரனையே நான் மணந்து கொள்வேன் என்று சபதம் செய்திருக்கிறேன். இவன் இறக்காவிட்டால் நான் யாரை யுமே மணந்து கொள்ளப்போவ தில்லை" என்றாள். அவளைக்கண்ட கஜவர்மன் மயங்கி நின்றான். அவ ளது அழகு அவனைப் பெரிதும் கவர்ந்து விட்டது. அவளை மணக்க வேண்டுமென்றால் மணிரஞ்சி தனைக் கொல்ல வேண்டும். எனவே அவன் தன் வாளை அவன் கழுத்தில் குத்தப் போனான்.

அப்போது ஒரு குரல் "நிறுத்து" என உரக்கக் கத்தியது. மறு நிமிடம் ஒரு விமானம் ஆகாயத்திலிருந்து வந்து அங்கு இறங்கியது. அதிலி ருந்து யட்ச மன்னனும் மணிபூஷண னும் வெளியே வந்தார்கள். யட்ச மன்னன் ஜீவதத்தனையும் கஜவர் மனையும் பார்த்து "மாவீரர்களே! நடந்ததை எல்லாம் விவரமாக மணி பூஷணன் என்னிடம் கூறினான். யட்சர்களின் கோடாலிக்காம்பான இந்த மணிரஞ்சிதனை விட்டு விடுங் கள். இன்று முதல் இவன் தன் சக்தி எல்லாம் இழந்து நடைபிணமாகத் தான் இருப்பான்" என்றான்.

ஜீவதத்தனும் "கஜா! யட்சமன்னர் சொன்னதைக் கேட்டாயா? மணிரஞ் சிதனை விட்டுவிடு" என்றான். கஜ வர்மனோ "அப்படியானால் வசந்த குமாரியின் சபதம் என்ன ஆவது?" என்று கேட்டான்.

வசந்தகுமாரியோ நாணிக் கோணி பத்மாவதியின் பின்னால் போய் மறைந்து நின்றாள். யட்ச மன்னனும் "இனி மணிரஞ்சிதன் நடைபிணம் என்று கூறிவிட்டேனே. அவன் பல்லைப் பிடுங்கி விட்ட பாம்பு போலாகி விட்டான். எனவே வசந்த குமாரியின் சபதத்தில் எவ்வித குறை யும் ஏற்படவில்லை. கல்தேரை நகர்த் திய ஜீவதத்தன் பத்மாவதியையும் கஜ வர்மன் வசந்தகுமாரியையும் மணந்து கொள்ளட்டும். இந்தத் திருமணங் களை நானே நடத்தி வைக்கிறேன். மலர்மாலைகளைக் கொண்டு வாருங்கள்" என்றான்.

மணிபூஷணன் ஓடிப் போய் விமா னத்திலிருந்து நான்கு மலர் மாலை

களை எடுத்து வந்தான். மாலைகள் நால்வரிடம் கொடுக்கப்பட்டன. பத்மாவதியும் ஜீவதத்தனும் மாலை மாற்றிக் கொண்டார்கள். அது போல வசந்தகுமாரியும் கஜவர்மனும் மாலை மாற்றிக் கொண்டார்கள். விடுதலை அடைந்த கந்தர்வர்களும் ராட்சஸர்களும் அந்த தம்பதிகளை வாழ்த்தினார்கள்.

அப்போது ஒரு கந்தர்வன் ஜீவதத்தனிடம் ''மாவீரரே! கல்தேரின் கீழ் இருந்த வைரச்சுரங்கத்தில் நாங்கள் எல்லோரும் நீண்ட காலமாக வேலை செய்தோம். எனவே நாங்கள் வெட்டி எடுத்த வைரங்களை நாங்கள் எடுத்துக் கொண்டு போக அனுமதிக்க வேண்டும்'' என்று வேண்டினான்.

அப்போது ராட்சஸர்களின் தலைவன் ''மாவீரரே! எங்களுக்கு வைரம் வேண்டாம். இந்த மாயாஜால மலைப் பகுதியை எங்களுக்குக் கொடுத்தால் போதும். திருப்தி அடைவோம்'' என்றனர்.

அவர்கள் கூறியதைக் கேட்ட ஜீவதத்தன் ''இங்குள்ள வைரங்களும் இப்பகுதியும் எனக்கு சொந்தம் இல்லையே. இதனால் நான் எப்படி இவற்றை உங்களுக்குக் கொடுக்க முடியும்?'' என்றான்.

அப்போது கந்தர்வமன்னன் ''இதெல்லாம் என்னுடையதே. எனவே இவற்றை உனக்குக் கொடுக்கிறேன். வாருங்கள். நீங்கள் நால்வரும் விமானத்தில் ஏறி உங்கள் இருப்பிடங்களுக்குச் செல்லுங்கள். இந்த விமானத்தை ஒரு மாத காலத்திற்கு நீங்கள் பயன்படுத்திக் கொள்ளலாம். அதன் பிறகு அது என்னிடம் வந்து சேரும்'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

ஜீவதத்தன் வைரங்களை கந்தர்வர்களுக்கும் மலைப்பகுதியை ராட்சஸர்களுக்கும் கொடுத்தான். பிறகு அவன் பத்மாவதியையும் கஜவர்மனையும் வசந்தகுமாரியையும் அழைத்துக் கொண்டு விமானத்தில் ஏறி அமர்ந்தான். விமானம் பத்மபுரத்திற்கும் வீரபுரத்திற்கும் சென்று அத் தம்பதிகளைக் கொண்டு போய் விடவே, அவர்கள் சுகமாக வாழ்ந்து வந்தார்கள்.

(முடிவுற்றது)



# ஏன் மரியாதையா?

பண்டிதர் பரசுராம் தம் வீட்டுத் திண்ணையில் அமர்ந்திருந்த போது அவரைக் காண வெளியூரிலிருந்து பசுபதி என்ற பண்டிதர் வந்தார். பரசுராம் அவரை வணங்கி வரவேற்று உட்கார வேண்டினார். அவர் அமர்ந்ததும், இரு பண்டிதர்களும் இலக்கியம் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

அப்போது அவ்வழியே வந்த விறகுவெட்டி வீரய்யன் பண்டிதர் பரசுராமைக் கண்டதும் தன் தலை மீதிருந்த விறகுக் கட்டைக் கீழே வைத்து விட்டு மரியாதையுடன், ''ஐயா, கும்பிடறேன்'' எனக் கூறி கைகூப்பி வணங்கினான். பரசுராமும் பதிலுக்கு அவனை வணங்கி, ''வீரய்யா! நலமாக இருக்கிறாயா?'' என்று கேட்டார். அவனும் ''உங்கள் புண்ணியத்தில் நலமே'' என்று கூறி விறகுக் கட்டை எடுத்துத் தன் தலைமீது வைத்துக் கொண்டு சென்றான்.

அப்போது பசுபதி பரசுராமிடம் ''விறகுவெட்டிக்கு நீங்கள் வணக்கம் செலுத்துவதா? இது சரி இல்லை'' என்றார். அப்போது பரசுராம் ''நாம் ஒருவர் செய்யும் தொழிலைக் கொண்டு அவரை மதிப்பிடக் கூடாது. மனிதனுக்கு மனிதன் என்ற முறையில் மரியாதை செய்ய வேண்டும். அதைத் தான் நான் செய்தேன். இதில் தவறு எதுவும் இல்லை. வீரய்யனும் மரியாதை தெரிந்தவன். அதையும் நீங்கள் பார்த்தீர்களே. நாம் மரியாதை கொடுத்தால் நமக்கு மரியாதை கிடைக்கும்'' என்றார்.



நவீன வேதாளக் கதை

# முனிவரின் சாபம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இடியும் மழையும் புயலுமாக உள்ள இந்த பயங்கர நடுநிசியில் நீ இப்படி முயல் வதைப் பார்த்தால் உன் முயற்சி சரிதா என்ற பெண்ணின் முயற்சி



அடைந்த நிலையைத்தான் அடைந்து விடுமோ என அஞ்சுகிறேன். உனக்கு அவளது கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' எனக் கூறிக் கதையைச் சொல்ல ஆரம்பித்து.

மங்கா என்பவள் சண்டைக்காரி. யாரையும் காரணமில்லாமல் திட்டு பவள். அவளுடைய கணவன் வீரா சாமி பரம சாது. அவளது வசைவு களையும் கடும் சொற்களையும் சகிப் பவன். இந்த தம்பதிகளுக்கு பலராமன் என்ற மகன் இருந்தான். அவனும் அவனது தந்தையைப் போல சாது தான். ஆனால் அவன் தன் தாயைத் தவிர வேறு யாருக்கும் பயப்படாதவன்.

ஒரு நாள் பலராமன் தன் தாயா ருக்கு ஒரு பட்டுப்புடவை வாங்க ஆரணி என்ற ஊருக்குச் சென்றான். ஆரணிப்பட்டுப் புடவைகளுக்குப் பெயர் பெற்ற ஊர். நாட்டின் பல பகுதிகளிலிருந்து வியாபாரிகள் அந்த ஊருக்குப் பட்டுப்புடவைகள் வாங்க வருவார்கள். பலராமன் இப்படிப் பட்ட ஊரில் தன் தாய் விரும்பும் நிறத்தில் சரிகையுடன் கூடிய பட்டுப் புடவையை வாங்கவே வந்தான்.

பலராமன் புடவை நெய்யும் பல தறிக்காரர்களின் வீடுகளுக்குப் போய் அவர்கள் நெய்து வைத்திருந்த பட்டுப் புடவைகளைப் பார்த்தான். ஆனால் அவளது தாயார் விரும்பியது போன்ற பட்டுப் புடவை யாரிடத்திலும் இருக்கவில்லை. அவன் மட்டும் புட வையை வாங்கிக் கொண்டு போகா மல் வெறுங்கையுடன் வீட்டிற்குத் திரும்பிச் சென்றால் தன் தாயார் எப்படி எல்லாம் திட்டி நொறுக்கு வாள் என்பதை எண்ணிப்பார்த்து பயப்பட்டான்.

என்ன செய்வது என்று தெரியா மல் அவன் ஆற்றங்கரையில் ஒரு மரத்தடியே கவலையுடன் உட்கார்ந்து விட்டான். அப்போது சில பெண்கள் ஆற்றில் குளித்து விட்டு குடத்தில் நீர் எடுத்துச் செல்ல அங்கு வந்தார்கள். அவர்களில் ஒருத்தி சரிதா. அவளுக்கு ஒரு முனிவர் வரம் கொடுத்திருந்தார். அவள் அதைக் கொண்டு தான் பயனடையாமல் பிறருக்கு நன்மை புரிந்து வந்தாள்.

அவள் பலராமனைப் பார்த்து கடுமையான குரலில் ''ஏய்! யார் நீ? இது பெண்கள் குளிக்கும் துறை என்றும் ஆண்கள் இங்கு வரக்கூடாது

என்றும் உனக்குத் தெரியாதா?'' என்று கேட்டாள்.

பலராமன் அவளது குரலில் இருந்த கடுமையைக் கண்டு பயந்து விட்டான். பிறகு அவன் தான் ஏன் கவலையுடன் அங்கு உட்கார்ந்திருக்கிறான் என்ற காரணத்தை விளக்கமாக அவளிடம் கூறினான். அதைக் கேட்ட சரிதா பலமாகச் சிரித்து ''உன் அம்மா தான் எப்படிப்பட்டவள்! ஒரு பையனையா புடவை வாங்க அனுப்பி இருக்கிறாள்? கவலைப்படாதே. நான் உனக்கு உதவுகிறேன். இந்த ஊரிலுள்ள சிவசாமி என்பவனின் வீட்டிற்குப் போ. நான் அங்கே வரும் வரை எனக்காக நீ காத்திரு. உன் தாயாருக்குப் பிடிக்கும் புடவையை நான் தேர்ந்தெடுத்துக் கொடுக்கிறேன். அதை நீ கொண்டு போய் உன் தாயாரிடம் கொடுத்தால் அவள் உன்னை வெகுவாகப் பாராட்டுவாள்'' என்றாள்.

பலராமனும் உடனே எழுந்து அங்கிருந்து போய் சிவசாமியின் வீட்டை விசாரித்துத் தெரிந்து கொண்டான். அவன் அங்கு போய் சரிதாவிற்காகக் காத்துக் கொண்டிருந்தான். சிறிது நேரமாயிற்று. சரிதாவும் அங்கு வந்தாள். பலராமனிடம் அவளது தாயாரின் நிறம் பற்றிக் கேட்டு ஒரு மலிவான புடவையைத் தேர்ந்தெடுத்து அவனிடம் கொடுத்தாள்.

அதன் பின் அவனி டம் அவள் ''நீ இதைக் கொண்டு போய் உன் தாயாரிடம் கொடுத்து இந்த மாதிரிப் புடவையைத் தான் விஜயபுர ராணி போன வருடம் வாங்கிக் கொண்டு போனாள்



என்று சொல். அப்போது உன் தாயார் ஒரேயடியாக மகிழ்ந்து போய் விடுவாள். ஏனெனில் ராணி உடுத்தும் புடவையைப் போன்றதை தானும் உடுத்திக் கொள்வது பற்றி நினைத்து அவள் பெருமைப்படுவாள்'' என்றாள்.

பலராமனும் தன் ஊருக்குத் திரும்பி வந்தான். புடவையைத் தன் தாயாரிடம் கொடுத்து விட்டு அவன் சரிதா சொல்லச் சொன்னதை அப்படியே கூறினான். அதைக் கேட்ட மங்கா மகிழ்ந்து போய் அப்படிப்பட்ட பெருமைக்குரிய புடவையை அவன் வாங்கி வந்ததற்காக அவனைப் பாராட்டினாள். பலராமன் தன் தந்தையிடம் மட்டும் சரிதாவைப் பற்றிக் கூறினான். அவனது தந்தை சரிதாவை பலராமனுக்குத் திருமணம் செய்து



வைத்தால் அவள் மங்காவைத் திருத்தி வழிக்குக் கொண்டு வருவாள் என்று எண்ணினான். தன் தந்தை கூறியபடி பலராமன் மறுநாள் ஆரணிக்குப் போய் சரிதாவைச் சந்தித்தான். அவ னைப் பார்த்ததும் அவள் ''உன் தாயா ருக்கு நான் தேர்ந்தெடுத்துக் கொடுத்த புடவை பிடிக்கவில்லையா? உன்னை திட்டினாளா?'' என்று கேட்டாள்.

பலராமனும் ''அதில்லை. என் தாயா ருக்கு அந்தப் புடவை மிகவும் பிடித்து விட்டது. இப்போது நான் வந்தது உன்னிடம் ஒரு முக்கியமான விஷயத்தைப் பேசத்தான். நான் உன்னை மணக்க விரும்புகிறேன்'' என்றான்.

சரிதாவோ ''இதை நீ என்னிடம் ஏன் சொல்கிறாய். நீ இது பற்றி உன் பெற்றோரிடம் சொல்லி அவர்களை என் பெற்றோர்களிடம் பேசச் சொல்ல வேண்டும்'' என்றாள்.

பலராமனும் ''அது பிறகு நடக் கும். அதற்கு முன் இது பற்றி நீ என்ன நினைக்கிறாய் என்பதை அறிய விரும்புகிறேன். அதனால் தான் இப் போது உன்னோடு பேச வந்தேன்'' என்றான். அருணாவும் சற்று யோசித்து விட்டு ''நீ நல்லவனாயும், சாதுவாயும் இருக்கிறாய். அதனால் தான் புடவை யைத் தேர்ந்தெடுக்க உனக்கு நான் உதவினேன்'' என்றாள். பலராமனும் தன் தாயாரைப் பற்றி விவரமாகக் கூறி ''நீ உன் சாதுரியத்தினால் என் தாயா ரின் குணத்தை மாற்ற முடியுமா?'' என்று கேட்டான்.

சரிதா அப்போது தனக்கு வரமளித்த ஞானசாகர முனிவரைப் பற்றி நினை வுப்படுத்திக் கொண்டாள். அவர் ஊர் ஊராகச் சென்று கொண்டிருந்த போது ஆரணிக்கு வந்தார். ஆற்றில் அவர் குளிக்கப் போகையில் படித்துறையில் வழுக்கி விழுந்து விட்டார். அவரால் எழுந்திருக்க முடியவில்லை. அப் போது சற்றுத் தூரத்தில் குளித்துக் கொண்டிருந்த பெண்கள் அவரை கேலி செய்தார்கள். சரிதா அவர்களை அடக்கி விட்டு முனிவர் விழுந்து கிடந்த இடத்திற்குப் போய் அவரைத் தூக்கி நிறுத்தி நடக்கச் செய்தாள். இதனால் முனிவர் மகிழ்ந்து போய் ''நீ இப்படி செய்த தற்கு சந்தோஷப்படு கிறேன். உனக்கு என்ன வேண்டுமோ கேள். அதைக் கொடுக்கிறேன்'' என்றார்.

சரிதா என்ன கேட்பது எனத் தயங்

கவே, அதைக் கண்ட முனிவர் ''நீ எதை அடைய விரும்பினாலும் உன் கண்களை மூடிக் கொண்டு என் பெயரை மூன்று தடவை கூறு. நான் உன்னெதிரே தோன்றி நீ விரும்பிய படி நடக்கும்படிச் செய்வேன்'' என்று கூறி விட்டுச் சென்றார்.

சரிதா பலராமனிடம் ஞானசாகர முனிவர் தந்த வரத்தைக் கூறி ''உன் தாயாரின் இயல்பை சாதாரணப்பட்ட வர்களால் மாற்றி விட முடியாது. இதற்கு அந்த முனிவரின் உதவியை நாடுவோம்'' எனக் கூறி மூன்று முறை அம்முனிவரின் பெயரை உச்சரித் தாள். ஞானசாகர முனிவரும் அவள் முன் தோன்றினார். அவர் எல்லா விஷயத்தையும் சரிதாவிடமிருந்து தெரிந்து கொண்டார். பிறகு அவர் பலராமனிடம் ''சரி, வா. நாம் போய் உன் தாயாரைப் பார்ப்போம்'' என்றார்.

அவர்கள் பலராமனின் ஊரை அடைந்தார்கள். முனிவர் பலராம னின் வீட்டிற்குள் போய் கட்டிலில் படுத்திருந்த மங்காவிடம் ''அம்மா! இந்த சன்னியாசிக்கு ஏதாவது பிச்சை போடுங்கள்'' என்று கேட்டார். அவளோ கோபம் கொண்டு எழுந்து ''இது தான் பிச்சை கேட்கும் லட்ச ணமா?'' எனக் கூறி அவரை வாய்க்கு வந்தபடி திட்டலானாள். முனிவரும் ''அம்மா! பிச்சைபோட விரும்பினால் போடு, இல்லாவிட்டால் போ என்று சொல்லிவிடு. கண்டபடி திட்டாதே.'' என்றார்.

மங்காவோ ''எல்லோரையும் இப்படித்திட்டுவது தான் என் பழக்



கம். எல்லோரும் பொறுமையுடன் சகித்துக் கொள்கிறார்கள். இதனால் எனக்கு எந்தப் பிரச்சினையும் ஏற்பட வில்லை தெரியுமா?'' என்று கட்டைக் குரலில் உறுமினாள்.

முனிவரோ ''இது வரை உனக்குப் பிரச்சினை இல்லாதிருக்கலாம். ஆனால் இனிமேல் தான் ஆரம்பமாகப் போகிறது. இனி நீ காரணமில்லாமல் யாரைத்திட்டினாலும் நீ திட்டும் ஒவ் வொரு வசைவும் ஒரு பிரம்மராட்சஸி யாக மாறி உன்னைத் துன்புறுத்தும்'' என்றார். அதைக் கேட்ட மங்கா கோபம் கொண்டு தன் வழக்கப்படி அவரைத் திட்டவே, அவள் முன் ஒரு பிரம்மராட்சஸி வந்து நின்று ''மங்கா! உன் கைகால்கள் ஒரே மாதத்தில் செயலிழந்து போகும்படிச் செய்கி றேன். இது முனிவரின் சாபத்தின்

பலன்'' என்றது. அதைக் கேட்ட மங்கா நடுநடுங்கி முனிவரின் கால்களில் விழுந்து ''என்னை மன்னித்து விடுங்கள். இனி மேல் நான் யாரையும் திட்டவே மாட்டேன்'' என்று கதறினாள்.

முனிவரும் ''சரி. இப்போது வந்த பிரம்மராட்சஸிக்கு நீ ஏதாவது ஒரு வேலை கொடுத்தாலே உன்னை ஒன்றும் செய்யாமல் போய் விடும். உனக்குப் பிரியமான அந்த மாமரத்தை அழிக்கச்சொல். அது அதை அழித்து விட்டுப் போய் விடும்'' என்றார். மங்காவும் அவ்வாறே கூறவே, பிரம்மராட்சஸியும் அந்த மாமரத்தை அழித்துவிட்டுப் போயிற்று.

முனிவரும் ''இனி யாரையும் திட்டாதே. திட்டினால் பிரம்மராட்சஸி வந்து உன்னைத் துன்புறுத்தும். ஆரணியில் சரிதா என்ற பெண் இருக்கிறாள். அவள் புத்திசாலி. அவளை உன் மகனுக்குத் திருமணம் செய்து வை. அவளால் உனக்கு நிம்மதி கிடைக்கும்'' எனக் கூறினார்.

இதற்குச் சில நாட்களுக்குப் பின் பலராமனுக்கும் சரிதாவிற்கும் விவாகம் நன்கு நடை பெற்றது. வேதாளம் இந்தக் கதையைச் சொல்லி ''மன்னா! சரிதா முனிவரின் வரத்தைக் கொண்டு மிகப் பெரும் பணக்காரரின் மருமகளாக ஆகி இருக்கலாமே. அப்படி தனக்காக அதைப் பயன்படுத்திக் கொள்ளாமல் பலராமனின் நன்மைக்காகப் பயன்படுத்தினாளே இது சரியா? இக்கேள்விக்கு சரியான விடை தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''சரிதா பலராமனின் சாதுத்தன்மையை விரும்பினாள். மேலும் அவன் நற்குணங்கள் கொண்டவன். எனவே யாவருக்கும் உதவும் மனப்பான்மை கொண்ட அவள் பலராமனின் தாயாரை நல் வழிப்படுத்தவே அவனை மணந்து கொண்டாள். இப்படி அவள் செய்தது சரியே'' என்றான்.

விக்கிரமனின் சரியான பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்கமரத்தில் ஏறிக் கொண்டது.



# நம் இந்தியா

## வினாக்கள்

சில இடங்கள் தனிச் சிறப்புகளால் புகழ் பெற்றுவிடுகின்றன. கீழ் குறிப்பிட்ட வற்றில் அந்த இடங்களையோ அல்லது அவற்றோடு தொடர்புடையவர்களின் பெயர்களையோ கண்டுபிடியுங்கள் பார்க்கலாம்!

1. ஜப்பானை 'உதயசூரிய நாடு' என்கிறார்கள். நம் நாட்டின் எப்பகுதியில் சூரியனின் காலைக் கதிர் முதலில் விழுகிறது?
2. .மலைச் சாதியினர் அதிகம் வாழ்கின்ற மாநிலம் எது?
3. ஒரு மாநிலம் நடனத்தில் தனக்கென ஒரு முறை கொண்டுள்ளது. கவியரசர் ரவீந்திரநாத் தாகூரும் இம்முறையை உலகெங்கும் அறிமுகப்படுத்தினார். அந்த மாநிலம் எது?
4. ஒரு மாநிலத்தில் ஏராளமான புத்த விஹாரங்கள் உள்ளன. அம்மாநிலம் அப்பெயரைத் தாங்கி உள்ளது. அது எது?
5. ஆங்கிலேயர்கள் ஆண்டபோது 'கோடைகாலத் தலைநகர்' என ஒரு நகருக்கு டில்லியிலிருந்து செல்வது வழக்கம். அந்நகர் எது? எந்த மாநிலத்தில் உள்ளது?
6. உலகில் முதலில் தேர்ந்தெடுக்கப்பட்ட கம்யூனிஸ்ட் அரசாங்கம் எந்த நாட்டில் அமைந்தது?
7. பிரெஞ்ச் பொறியாளர் லேகோர்புசீர் நம் நாட்டில் ஒரு நகரை நிர்மாணித்தார். அது தற்போது இரு மாநிலங்களின் தலைநகராக உள்ளது. அந்த நகரின் பெயரும் இரு மாநிலங்களின் பெயர்களும் என்ன?
8. கும்பமேளா நான்கு வெவ்வேறு ஊர்களில் நடைபெறுகிறது. இவற்றில் ஒரே மாநிலத்தில் இரு நகரங்களில் நடைபெறுகின்றன. அந்நகரங்கள் யாவை? அவை உள்ள மாநிலம் எது?

(விடைகள் அடுத்த மாதம்)

## ஜனவரி மாத வினாக்களின் விடைகள்

1. நேதாஜி சுபாஷ் சந்திர போஸ்.
2. மகன்லால் காந்தி முதலில் 'சத் கிருஹ்' என்ற சொல்லை உருவாக்கவே, காந்திஜீ அதை 'சத்தியாக்கிரகம்' என்று ஆக்கினார்.
3. லக்னௌ காங்கிரஸ் மகாசபை, 1916.
4. லாலா லஜ்பத்ராய், பாலகங்காதர திலக், பிபின் சந்திரபால்.
5. 1905.
6. 1857.
7. லாகூர் காங்கிரஸ் மகாசபை டிசம்பர் 31, 1929.
8. இந்தியத் தலைவர்களுடன் 1928ல் சர் ஜான் தலைமையில் வந்த கமிஷனர்.
9. ஆகஸ்ட் 24, 1946.
10. பாலகங்காதர திலக்.

## நாகாலாந்தின் நாட்டுப்புறக்கதை

நம் நாட்டின் வடகிழக்குப் பகுதியில் மலைகள் அடர்ந்த மாநிலம் நாகாலாந்து. வடக்கே அருணாசலப்பிரதேசத்தையும் அஸ்ஸாமையும், தெற்கே மணிப்பூரையும் மேற்கே அஸ்ஸாமையும் கிழக்கே தற்போது மைன்மார் எனப்படும் பர்மாவையும் இது எல்லையாகக் கொண்டுள்ளது.

இதன் பரப்பளவு 16527 சதுர கி.மீ. மக்கள் தொகை 1,988,636 (2001 கணக்கின்படி) இது கடல் மட்டத்திற்கு மேல் சுமார் 1490 மீட்டர் உயரத்தில் உள்ளது.

நாகாலாந்தின் தலை நகரம் கொஹிமா. இந்த மாநிலம் 1963 டிசம்பர் முதல் தேதியில் அமைக்கப்பட்டது. அப்போது இது நம் நாட்டின் 16வது மாநிலமாக உருவாகியது. இங்கு பேசப்படும் முக்கிய மொழிகள் நாகாமீஸ், ஆங்கிலம், ஹிந்தி ஆகியவை.

நாகாமலைத்தொடரில் மிக உயர்ந்த சிகரம் சாரமதி. இது கடல் மட்டத்திலிருந்து 3877 மீ உயரமாகும். கொஹிமா அழகிய இயற்கைக் காட்சிகளைக் கொண்ட மலை வாசஸ்தலம்.

இம்மாநிலத்தின் நுழைவாயில் நகரம் திமாபூர். இது கடல் மட்டத்திற்கு மேல் 195 மீ. உயரத்தில் உள்ளது.

# நிம்மதி பெற்ற கொஹிடோ

நாகாலாந்தில் ஜுன்ஹே பூடோ என்ற சிறிய கிராமத்தில் கொஹிடோ என்ற சிறுவன் இருந்தான். அவனுக்கு வயது பதினான்கே. அவன் ஒரு அநாதை. அவனைக் கவனித்துக் கொள்பவர் யாருமே இல்லை. அக்கிராமத்தவர்தம்மைத் தாமே பார்த்துக் கொண்டார்கள். அதனால் கொஹிடோ அக்கிராமத்துச் சிறுவர்



கள் படுத்துறங்கும் பொது இடமாகிய மோரங் எனப்படும் இடத்தில் இருந்து வந்தான். சாப்பாட்டிற்குப் போதிய அளவு பணம் தான் அவனால் சம்பாதிக்க முடிந்தது. வேறு அதிகமாக முடியவில்லை. ஊருக்கு வெளியே இருந்த ஒரு மூங்கில் புதரின் அருகே நின்ற அவன் பல்லைக்கடித்தவாறே "நான் வேலை இல்லாமல் இருப்பவனா? இல்லை. நான் ஏதாவது செய்து கௌரவமாய் வாழ வேண்டும். நான் செய்யப்போவது இது வரை இந்த கிராமத்து எந்த நாகாவும் செய்யாததாக இருக்க வேண்டும். அப்படிப்பட்ட வேலை என்ன?" என்று யோசிக்கலானான்.

அப்போது சில பெண்கள் பாடிக் கொண்டு தங்கள் குடங்களைக் காங்கில் வைத்துத் தோளில் தொங்க விட்டுக் கொண்டு வெகு தூரம் போய்த் தண்ணீர் கொண்டு வரப் போய்க் கொண்டிருந்தார்கள்.

அந்த கிராமத்தில் தண்ணீர்ப் பிரச்சினை தீர்ாத பிரச்சினையாக இருந்தது. ஒரு கிணறைத் தான் வெட்டி விட்டால் ஊராருடைய சிரமம் எல்லாம் தீர்ந்து அப்போது ஊரார் தன்னை மிகவும் மதிப்பார்கள் என்று நினைத்தான். எனவே கிணறை வெட்டுவதென்று அவன் தீர்மானித்துக் கொண்டான். ஆனால் அதை யாருக்கும் தெரியாமல் வெட்டி எல்லோரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்த வேண்டுமென நினைத்தான்.

அவன் கிணறை வெட்டத்




தொடங்கினான். அது மிகவும் கடினமான வேலையாகத் தான் இருந்தது. கிணறு வெட்டப் பல வருடங்கள் பிடித்தன. கொஹிடாவும் வளர்ந்து பெரியவனாகி விட்டான். கிணற்றில் நீர் ஊறி வரலாயிற்று. சில நாட்களில் கிணற்றில் போதிய நீரும் நிரம்பியது. வழக்கம் போல தண்ணீர் கொண்டு வரப் பெண்கள் ஆற்றிற்குப் போய்க் கொண்டிருந்ததைக் கண்ட அவன் அவர்களிடம் போய் "நீங்கள் தண்ணீர் எடுத்து வர இனி வெகு தூரம் நடந்து ஆற்றிற்குப் போக வேண்டாம். என் கிணற்று நீரை எடுத்துக் கொண்டு போங்கள்" என்று கூறினான்.

முதலில் அவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். பிறகு அவர்கள் சற்றுத் தயங்கிய பின் அவர்கள் கிணற்று நீரைப் பார்த்தார்கள். அவர்கள் தண்ணீர் எடுப்

## தலைவேட்டை

பழங்கால நாகர்கள் மனிதர்களை வேட்டை ஆடி அவர்களது தலைகளைச் சேகரித்து பத்திரப்படுத்தி வந்தார்கள். யாராவது ஒரு நாகன் ஒரு மனிதனின் தலையைக் கூடக் கொண்டு வராவிட்டால் அவனை இழிவுப் படுத்தி யாருமே அவனுக்குப் பெண் கொடுக்க மாட்டார்கள். நாகர்கள் தாம் சேகரித்த தலைகளை அவ்வப்போது சுத்தம் செய்து வைத்தும் வந்தார்கள்.






பதற்குள் கிணறு இருக்கும் செய்தி ஊரெங்கும் பரவியது. எல்லோரும் கிணறைப் பார்க்க வந்து விட்டார்கள். எல்லோரும் கொஹிடோவைப் பாராட்டினார்கள். அவனது மதிப்பும் உயர்ந்தது.

கொஹிடோவின் கிணற்றிற்கு மேலுலகிலிருந்து கின்னரர்கள் இரவு வேளைகளில் வரலானார்கள். கின்னரக்கன்னிகள் நிலா வெளிச்சம் வந்ததும் அக்கிணற்றிற்கு வந்தார்கள். அவர்கள் விடியும் வரை அங்கே இருந்து சுற்றிலும் அசுத்தப்படுத்தி விட்டுப் போனார்கள்.

ஊரார் இதைக் கண்டு கொஹிடோவிடம் ''யார் இந்த மாதிரி செய்கிறார்கள்?'' என்று ஆத்திரப்பட்டுக் கேட்டார்கள்.

அவனுக்கு அது பற்றித் தெரியாததால் விழித்தான். ஊராரோ ''உனக்குத் தெரியும். இது மாதிரி தொடர்ந்து நடந்தால் உன்னை ஊரை விட்டே துரத்தி விடுவோம்'' என்று எச்சரித்து விட்டுப் போனார்கள்.

கொஹிடாவும் அவ்வாறு யார் செய்கிறார்கள் என்று ஒரு நாளிரவு மறைந்திருந்து பார்த்தான். வழக்கம் போல கின்னரக்கன்னிகள் கிணற்றிற்கு வந்தார்கள். அவர்கள் தங்கள் இறக்கைகளை எடுத்துத் தனியாக ஓரிடத்தில் வைத்து விட்டு கிணற்றினுள் குதித்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். அப்போது கொஹிடா பூனை போல நடந்து சென்று ஒரு ஜோடி இறக்கைகளை எடுத்துக் கொண்டு மறைவிடத்திற்குப் போய் விட்டான்.

விடியும் வேளைக்கு கின்னர கன்னிகள் கிணற்றிலிருந்து வெளியே வந்து தம் இறக்கைகளை எடுத்துப் பொருத்திக் கொண்டார்கள். அப்போது ஒருத்தி ''என் இறக்கைகளை காணவில்லை. தேடி எடுத்துப் பொருத்திக் கொண்டு வருகிறேன்'' என்றாள்.

மற்ற கன்னிகளோ ''நேரமாகி விட்டது. நாங்கள் போய்க் கொண்டே இருக்கிறோம். நீ உன் இறக்கைகளைக் கண்டு பிடித்து பொருத்திக் கொண்டு வந்து சேர்'' என்று கூறி விட்டுப் போய் விட்டனர்.

அந்தக் கன்னி மட்டும் நின்று கொண்டு தன் இறக்கைகள் காணவில்லையே என்று அழலானாள். அதைக் கண்ட கொஹிடோ தன் மறைவிடத்திலிருந்து வந்து அவள் முன் போய் நின்று ''அழாதே. நீ என்னை மணந்து கொண்டு இங்கே சுகமாக இருக்கலாம்'' என்றான்.

அவளுக்கும் வேறு வழி தோன்றாததால் அதற்குச் சம்மதித்தாள். கொஹிடோ அவளை மணந்து கொண்டு ஊருக்குள் அழைத்துச் சென்றான். கொஹிடோ ஒரு வீட்டைக்கட்டி அவளுடன் வாழலானான். பல ஆண்டுகள் கழிந்தன. கின்னரக் கன்னி நன்கு சமைக்கவும் ஜுதோ, ருஹி போன்ற பானங்களைத் தயாரிக்கவும் கற்றுக் கொண்டாள். கொஹிடோ வீட்டில் இல்லாத போது

## பிரிவுகள்

நாகாலாந்தில் மலைவாசிகளின் பதிநான்கு முக்கிய பிரிவுகள் உள்ளன. இவற்றில் முக்கியமானவை அங்காமி, ஆவோ, சக்கேசங், கங்க், கெமுன்கன், கோன்யாக், லோதா, போம் ஆகியவை. ஒவ்வொரு பிரிவும் தனக்கென வழிமுறைகளைக் கொண்டுள்ளது. அவர்களது மொழி, உடை, நகைகள், தலைப்பாகை பிரிவுக்குப்பிரிவு மாறியே உள்ளன. இந்தப் பிரிவுகளிலும் இப்போது பல உட்பிரிவுகள் ஏற்பட்டு விட்டன.






ஆனால் கொஹிடோ அவற்றை அவள் கண்டு பிடிக்க முடியாத இடத்தில் ஒளித்து வைத்திருந்தான்.

அவளும் அவன் அவற்றை எங்கு தான் ஒளித்து வைத்தி ருப்பான் என்று யோசிக்க லானாள். அது அவள் போக விரும்பாத அருவருக்கத்தக்க இடமாகத் தான் இருக்க வேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது. ஒரு வேளை கோழிகளை அடைக்கும் இடமோ? இது அவளுக்குத் தோன்றியதும் உடனே அங்கு அவள் சென்றாள். அங்கு இறகுகளும் குப்பையும் பரவ லாக விழுந்து கிடந்தன. ஒரே துர் நாற்றம் அடித்தது. ஆயினும் அவள் கோழிகளை

அவள் தன் இறக்கைகளை அவன் எங்கே ஒளித்து வைத்திருக்கி றான் என்று தேடிப் பார்த்தும் வந்தாள்.

அடைத்து வைக்கும் கூடையைத் தூக்கினாள். அதிலிருந்த கோழி யும் அதன் குஞ்சுகளும் பயந்து

## கைவினைகள்

நாகர்களின் சிற்பங்களும், ஆடைகளும் மனிதத்தலைகளை வேட்டையாடும் உருவ படங்களைக் கொண்டுள்ளன. மரவேலைப் பாடு, மூங்கிலாலான பொருள்கள், மண் பாண்டங்கள் ஆகியவற்றைத் திறமையுடன் நாகர்கள் தயாரிக்கிறார்கள். மூங்கிலும் பிரம் பும் ஏராளமாகக் காடுகளில் கிடைப்பதால் கூடைகளைச் செய்கிறார்கள். பாய்கள் ஈட்டிகள், கை, கால், கழுத்து ஆகியவற்றில் அணிபவை ஆகிய இவற்றை எல்லாம் அவர்கள் தயாரிக்கிறார்கள்.



கத்தியவாறே நாலாபக்கத்திலும் ஓடின. அந்த இடத்தில் தேடிய போது அவளுக்கு அவளுடைய இறக்கைகள் கிடைத்து விட்டன.

அவள் அதை எடுத்து தூசி தட்டினாள். பிறகு அவள் அதைத் தன் உடலில் பொருத்திக் கொண்டு கின்னர உலகிற்குப் பறந்து போய் விட்டாள். வெளியே வேலைக்கு போயிருந்த கொஹிடோ மாலையில் தான் வீட்டிற்கு வந்தான். அங்கு தன் மனைவியைக் காணாது ஊரெங்கிலும் தேடினான். யாரைக் கேட்டாலும் அவளைப் பார்க்கவில்லை என்ற பதில் தான் கிடைத்தது. அவன் சந்தேகப்பட்டு வீட்டிற்கு வந்து கோழிக்கூடை இருந்த இடத்திற்குச் சென்றான். கூடை எடுக்கப்பட்டிருந்தது. அங்கு தான் ஒளித்து வைத்த இறக்கைகள் இல்லாததைக் கண்டு கின்னரக்கன்னி தன் உலகிற்குப் பறந்து போய் விட்டாள் எனத் தெரிந்து கொண்டாள்.

அவன் தன் வீட்டு வாசலில் உட்கார்ந்து கண்ணீர் உகுத்துக் கொண்டிருக்கும் போது ஒரு வெள்ளைக் காக்கை பறந்து வந்தது. அது அவனைக் கண்டு ''கவலைப்படாதே. உன் மனைவி கின்னர உலகிற்குப் பறந்து சென்றதை நான் பார்த்தேன் நான் உன்னை அங்கே கொண்டு போய் விட்டுவிடுகிறேன்.'' என்றது.

கொஹிடோவும் அதற்கு இணங்கினான். வெள்ளைக்காக்கை அவனைத் தன் முதுகின் மீது ஏற்றிக் கொண்டு கின்னர உலகிற்குச் சென்றது. அங்கு

## சொற்களின் பொருள்

*மோரங்* - விவாகமாதவர் உறங்கும் இடம்
*டாவோ* - ஒரு வகை ஈட்டி
*காங்க்* - தோளில் மாட்டிக் கொள்ளும் ஒரு வகை மூங்கில் கூடை
*சுங்கா* - மூங்கிலால் செய்யப்பட்ட கோப்பை
*கின்னரர்* - வானுலகில் வாழும் தேவதை
*ஜுதோ, ருஹி* - சாதத்திலிருந்து தயாரிக்கப்படும் பானங்கள்



கொஹிடோ தன் மனைவியைச் சந்தித்தான். அவளும் ''நாம் பூஉலகிற்குப் போக வேண்டாம். இங்கேயே சுகமாக வாழலாம்'' என்றாள்.

கொஹிடோவும் அதற்குச் சம்மதித்து விட்டான்.



விஜயநகர மன்னர் கிருஷ்ண தேவராயரின் தர்பார் நடக்கையில் இரு ஓவியர்கள் ஓர் ஓவியத்தைப் பிடித்துத் தூக்கிவந்து மன்னருக்கும் அங்குள்ளவர்களுக்கும் காட்டினார்கள். அது மன்னரின் நிலை உருவப் படம். மன்னர் அதைப் பார்த்துத் திருப்தி அடைந்தார்.

எல்லோரும்ட 'ஆஹா ! ஓஹோ !' என்று அதைப் பாராட்டினார்கள். மன்னரும் "இந்த ஓவியத்திற்கு ஓராயிரம் தங்க நாணயங்களைக் கொடுத்தேன். இதுபற்றி நீங்கள் எல்லாம் என்ன நினைக்கிறீர்கள்?" என்று கேட்டு எல்லோரையும் பார்த்தார்.





மன்னரருகே இருந்த ஒரு கனவான் எழுந்து "மிக மிக அற்புதமாக உள்ளது. உங்களை அப்படியே உரித்து வைத்திருப்பது போல உள்ளது. இதைத் தீட்டிய ஓவியர் யாரோ?" என்று கேட்டார்.

மன்னர் அதற்கு எந்த பதிலும் கூறாமல் புன்னகை மட்டும் புரிந்தார். எங்கும் "பேஷ்! பேஷ்!! மிக அழகாகவே உள்ளது" என்றே யாவரும் கூறிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் கூறியதால் அவர் திருப்தி அடைந்து விடவில்லை. அதனால் அவர் தென்னாலி ராமனைப் பார்த்து, "ராமா! நீ இதுபற்றி என்ன நினைக்கிறாய்?" என்று கேட்டார்.





தென்னாலிராமனும், ''உங்கள் முகத்தின் ஒரு பக்கம் தானே தெரிகிறது. மறு பக்கம் எங்கே?'' கேட்டான். ராயரும் ''ஓவியத்தில் சிலவற்றை நாம் இருப்பதாக எண்ணிக் கொள்ள வேண்டும்'' எனவே, ராமனும் ''அப்படியா! இதை விட அருமையான ஓவியத்தை நான் தீட்டுவேனே !'' எனவே, ராயரும் ''சரி, தீட்டிக் கொண்டு வா, பார்க்கலாம்'' என்றார்.



ஒரு மாதமாயிற்று. தென்னாலி ராமனை தர்பாரில் காண முடிய வில்லை. அவன் எங்கே என்று ராயர் கேட்கவே, ஒருவர் ''சிரமப்பட்டு ஓவியம் வரைகிறாரோ?'' என்று கேலியாகக் கூறினார். வேறொருவர் ''அவனுக்குத் தூரிகை என்றால் என்ன என்றாவது தெரியுமா?'' எனக் கேட்டுச் சிரித்தார்.



தென்னாலிராமனும், இருவர் ஓர் ஓவியத்தைத் தூக்கிவர வந்து, ராயரை வணங்கி ''இதோ நான் தீட்டிய ஓவியம்'' என்றான். ராயர் அதைக் காட்டச் சொல்லவே, அதை எடுத்து வந்த இருவரும் ஓவியத்தை மறைத்திருந்த திரையை விலக்கி விட்டு அதைக் காட்டினார்கள். ராயரோ, ''என்ன இது? குதிரையில் வால் மட்டும் தான் வரையப்பட்டிருக்கிறதே!'' என்று கூவினார்.



ராமனும் பணிவுடன், ''அரசே! ஓவியத்தில் சிலவற்றை இருப்பதாக நாம் எண்ணிக் கொள்ள வேண்டும் என்று நீங்கள் தானே கூறினீர்கள்? அதன்படி இந்த ஓவியத்தில் வால் மட்டும் இருப்பதால் குதிரையின் மற்ற பகுதி மறைந்திருப்பதைக் கற்பனை செய்து பார்த்துக் கொள்ள வேண்டும்'' என்றான்.

நம் நாட்டையும் நம் மக்களையும் பற்றி நீங்கள் எவ்வளவு அறிந்திருக்கிறீர்கள்? இங்கு சில அதிசய, அற்புத, ஆச்சரியம் அளிக்கும் தகவல்கள் கொடுக்கப்படுன்றன. இது உங்களை நம் நாடு பற்றி மேலும் நன்கு அறிந்து கொள்ள உதவும். எனவே படித்து மகிழுங்கள்.

# இந்தியாவின் இன்முகம்

## உலகின் முதலாவது அறுவை சிகிச்சை வைத்தியர்.

பழங்காலத்தில் அப்போதிருந்த சூழ்நிலையில் அதிகமாக வெளியுலகிற்குத் தெரியாமல் இவர் இருந்திருக்கலாம். ஆனால் அவர் தம் காலத்தில் தொலை நோக்குடன் வாழ்ந்தவர். இவர் தாம் சுஸ்ருதர் என்பவர். இவர் காடராக்ட், சிஸரின், மூத்திர கோசத்தில் உள்ள கல் போன்றவற்றை அகற்றுதல் போன்ற அறுவை சிகிச்சைகளை கி.மு.800ல் செய்து குணப்படுத்தியவர்.

உடலினுள் ஏற்பட்ட காயங்களைத் தைக்க இவர் கட்டெறும்புகளைப்பயன்படுத்தினார்.

காயங்களின் இரு ஓரங்களையும் நெருக்கமாகச் சேர்த்து வைத்து அவற்றை இறுகப் பிடித்துக் கொள்ள கட்டெறும்புகள் அங்கு வைக்கப் படும். அவை காயத்தின் இரு பக்கங்களையும் தம் சிறு கொடுக்குகளால் இறுகப் பற்றியதும், அவற்றின் உடல்கள் மட்டும் அகற்றப் பட்டுவிடும்.



# கேரளாவின் சவிட்டு நாடகம்

மரக்கட்டைகளைக் கொண்டு அமைக்கப் பட்ட மேடை மீது உடற் கட்டு கொண்ட ஐம்பது வாலிபர்கள் தொடர்ந்து குதித்து ஓடியாடிக் கொண்டே இருந்தால் அந்த மேடை நொறுங்கி விழுந்து விடுமல்லவா? ஆம் இந்தக் கடைசி முடி வைத்தான் சவிட்டு நாட கத்தைப் பார்ப்பவர்கள் ஆவலுடன் எதிர்ப்பார்க் கிறார்கள். இது கேரளத் தின் ஒரு வகை நாட்டுப் புற நடனம்.



போர்த்துக்கீசியர்கள் ஐரோப்பிய ஆபெரா என்ற மேடை நாடக நிகழ்ச்சிகளை புகுத்தி னார்கள். இது கேரளா வின் கதக்களி நடனத் தோடு கலந்து சவிட்டு நாடகம் என்ற புதிய நாட்டிய நிகழ்ச்சியை உருவாக்கியது. இதற்குக் கதைகள் கிருஸ்துவமத நூல்களிலிருந்தும் ஐரோப்பிய வரலாற்று நிகழ்ச்சிகளிலிருந்தும் நாட்டிய நாடகங்களாக ஆக்கப்பட்டன.

கதக்களியைப் போலவே இந்நாடகங்க ளும் போர்களில் முடி கின்றன. இதற்காகத்தான் ஐம்பது கலைஞர்கள் மேடைக்குக் கொண்டு வரப்படுகின்றனர். உறுதி யான மரப்பலகைகளில் அமைக்கப்பட்ட மேடை போர்க்காட்சியில் இளை ஞர்களின் குதிப்பிலும் மிதிப்பிலும் உடையா விட்டால் அந்த நாடகம் வெற்றி பெற வில்லை என்றாகிவிடும்!

## கஷ்மீரின் கதகதப்பு

கஷ்மீரில் நீங்கள் குளிர் காலத்தில் இருந்தால் அதன் குளிரை உங்களால் தாங்க முடியாது. ஆனால் அங்குள்ள கஷ்மீரிகள் அதை எப்படித் தாங்கிக் கொள்கிறார்கள் என்று ஆச்சரியப்படுகிறீர்களா? அவர்கள் அச்சமயத்தில் எப்படி சிரித்துப் பேசி சுக மாகக் காலம் கழிக்கிறார் கள். இதற்குக் காரணம் அவர்கள் தம் ஆடைக ளுள் வைத்திருக்கும் அங் கீடி என்பது. இது களி மண்ணால் ஆக்கப்பட் டது. இதில் நெருப் புத் தணல் இருக்கும். இதை ஒரு சிறு மூங்கில் கூடை யில் வைத்து இடுப்பில் ஆடையால் மறைத்து விடுகிறார்கள். இதனால் கதகதப்பு அவர் களுக்கு எப்போதும் உள்ளது.



# மல்லகம்பா!



மல்லகம்பா என்பது நம் நாட்டுப்பழங்கால விளையாட்டுகளில் ஒன்று. இது மகாராஷ்டிர மாநிலத்தில் மிக அதிகமாக விளையாடப்படுகிறது. இந்த விளையாட்டு தேகப்பயிற்சி போன்றது. இந்த விளையாட்டு வீரர்களின் சுறுப்சுறுப்பையும் கவன ஈடுபாட்டையும் உடல் வலிமையையும் பரீட்சித்துப் பார்ப்பது போல அமைந்துள்ளது. ஒரு நீண்ட கோல் நேர்குத்தாக நிறுத்தப்படுகிறது. இந்தக் கோலின் மீது விளையாட்டு வீரர்கள் கீழே விழாமல் தம்மை சுதாரித்துக் கொண்டு தம் உடலை வளைத்தும், திருப்பியும் பல செயல்களைப் புரிகிறார்கள்.

பத்தொன்பதாவது நூற்றாண்டில் இரண்டாவது பாஜிராவ் பேஷ்வா காலத்தில் புதுப் பொலிவு பெற்ற இது இன்று பல விதங்களில் விளையாடப்பட்டு தேசியப் போட்டிகளும் நடத்தப்படுகின்றன.






# மீன் கடை அல்ல!



வயல்களில் மீன் வளர்ப்பா! அபட்னிஸ் என்ற மலைச் சாதிக் கூட்டத்தவர்கள். அருணாசலப் பிரேதசத்திலுள்ள வயல்களில் நெல்லையும் மீன்களையும் சேர்ந்தாற் போல ஒரே சமயத்தில் விளைவிக்கிறார்கள். வெள்ளம் வந்து நீர் தேங்கும் வயல்களில் நெற் பயிர் முற்றியதும் மீன் வளர்ப்பை அங்கு தொடங்குகிறார்கள். சிறு பூச்சிகளை நீரில் விட்டு அவற்றை அம்மீன்களுக்கு உணவாக்குகிறார்கள். அறுவடைக்கு நெற்பயிர் தயாராகும் போது மீன்களும் பருத்து அம்மக்களுக்கு உண்ணப் பயன் படுகின்றன.

இந்தியப் பண்டிகைகள்

# வசந்த பஞ்சமி

வசந்த பஞ்சமி வரும் போது இந்தியா முழுவதிலும் வசந்த பஞ்சமிப் பண்டிகை கொண்டாடப் படுகிறது. இது மாக மாதத்தில் (ஜனவரி - பிப்ரவரி) சுக்கில பட்சத் தில் பஞ்சமி திதியன்று வருகிறது. நம் நாட்டின் கிழக்குப் பகுதியில் இது சரஸ்வதி பூஜை என்று கோலாகல மாகக் கொண்டாடப்படுகிறது.



மேற்கு வங்கத்தில் சரஸ்வதியின் பொம்மைகளை இந்த நாளில் பூஜிக் கிறார்கள். புத்தகங்களும் இசைக் கருவிகளும் இவற்றின் முன் வைக்கப் படுகின்றன. இந்த நாளில் சிறுவர் சிறுமியர் புத்தகங்களைப் படிப்ப தில்லை! பூஜைக்குப் பின் சரஸ்வதி உருவ பொம்மைகள் கடலிலோ அல்லது ஆற்றிலோ போடப்படுகின் றன. இந்த நாளில் இம் மாநிலத்தில் சிறுமிகள் கூடப் புடவை கட்டிக் கொள்கிறார்கள்.



சரஸ்வதி தேவியை மஞ்சள் நிற மலர்களால் அர்ச்சனை செய்கிறார் கள். இந்த மலர்கள் இந்தப் பருவ காலத்தில் ஏராளமாகப் பூக்கின்றன. பஞ்சாபில் வசந்த பஞ்சமி காலத்தில் உயரப் பட்டங்களைப் பறக்க விடுகி றார்கள். இதில் பல போட்டிகளும் நடத்தப்படுகின்றன.

வசந்தருது இயற்கையை அழகு படும்படிச் செய்கிறது. வட இந்தியா வில் வயல்களில் கடுகு விளைச்சல் அபாரமாகி மஞ்சள் நிற மலர்களை அள்ளித் தெளிக்கிறது. இச்சமயத்தில் வசந்தத்தின் வருகையைக் குறிக்க யாவரும் மஞ்சள் நிற ஆடைகளை அணிந்து மகிழ்கிறார்கள்.

# கார்னவால்

கோவாவில் பிப்ரவரி மாதத்தில் எங்கு பார்த்தாலும் பாட்டும் கூத்தும் கேளிக்கையுமாக இருக்கும். இதற்குக் காரணம் அங்கு மூன்று வாரகாலம் நடக்கும் கார்னவால் விழா தான். வெகு காலத்திற்கு முன் கோவாவை ஆண்ட மோமோ என்ற மன்னன் கார்ன வால் விழா நடக்கையில் தன் நாட்டு மக்களில் யாருமே வேலை செய்யக் கூடாது என்று கட்டளை இட்டதாக கோவா வாசிகள் நம்புகிறார்கள்.

வண்ண வண்ண ஊர்திகளில் சிறு சிறு குழுக்களாக இசைக் கலைஞர்களும் நடனக் கலைஞர்களும் இருந்து பல நிகழ்ச்சிகளை நடத்துகிறார்கள். இந்த ஊர்திகள் பல வடிவங்களில் அமைக்கப்படுகின்றன. இந்த விழா விற்காக சிறப்பாக அமைக்கப்படும் இந்த ஊர்திகளில் சிலர் சிரிப்பை மூட்டும் முக மூடிகளையும் வண்ண ஆடைகளையும் அணிந்து செல்கி றார்கள். இவ்விழாவின் போது நடிக்க வரலாற்றை அடிப்படையாகக் கொண்ட சிறு நாடகங்கள் எழுதித் தயாரிக்கப்படுகின்றன. இதனைப் 'பெலோ' எனக் கூறுகிறார்கள்.

இவ்விழாவின் போது நடிக்கப் படும் நாடகங்களில் எல்லாம் ஆண் கள் தான் நடிக்கிறார்கள். இந்நாடகங்



களில் பாடல்களும் நடனங்களுமே இடம் பெறுகின்றன. வசனங்கள் இராது. ஆண்கள் காடியான வண்ணங் களைப் பூசிக்கொண்டு வண்ண ஆடைகளையும் காலம் காலமாக அணியும் தலைப்பாகைகளையும் வைத்துக் கொண்டு தோன்றுகிறார் கள். கார்னவால் ஆரம்பமாவதற்குப் பல மாதங்களுக்கு முன்பிருந்தே இந்நாடகங்களுக்கான ஒத்திகைகள் நடத்தப்படுகின்றன. விழாவின் போது விடியற்காலையில் ஆரம்ப மாகும் இந்த நாடகங்கள் நள்ளிரவு வரை நடிக்கப்படுகின்றன. மக்கள் இவற்றைக் காணக் கூட்டம் கூட்ட மாக ஊர்திகளின் பின்னாலேயே செல்கிறார்கள்.

கிபி 1700 கார்னவால் விழா தெருக் களில் போலிச் சண்டைக்களுடன் நடத்தப்பட்டது. இச்சண்டைகளில் அழுகிய முட்டைகளும் காகிதப்பை களில் நிரப்பப்பட்ட மலர்களும் சீமைச்சுண்ணாம்புப் பொடியும் தாரா ளமாகப் பயன்படுத்தப்பட்டன.



# தோஸ்மோசே



ஜம்மு கஷ்மீரின் லடாக் பகுதியில் தோஸ்மோசே எனப்படும் பழங் காலப்பழக்கம் கைப்பிடிக்கப்பட்டு வருகிறது. ஒவ்வொரு ஆண்டிலும் அரண்மனையில் இசையும் கொட் டும் பிப்ரவரி மாதத்தில் முழங்கிய வாறே இருக்கும். அந்த நாளில் பல் வேறு பௌத்த மடங்களிலுள்ள லாமாக்கள் முகமூடிகளை அணிந்து நாட்டிய நாடகத்தை நிகழ்த்துகிறார் கள். லாமாக்கள் திரிகளை அர்ப் பணித்து விட்டுப் பின்னர் அதை அழித்து விடுகிறார்கள்.

இவ்வாறு அர்ப்பணிக்கப்படுவது டோ எனப்படும் நூல் குறுக்குத் திரிகள். லாமாக்கள் உரிய முறையில் வழிபட்டு அதற்கான மந்திரங்களை உச்சரித்து அர்ப்பணித்தவற்றிற்கு பேய் பிசாசுகளையும் பூதங்களையும்

அடக்கும் சக்தி வந்து விடும் என்று மக்கள் நம்பிக்கை கொண்டு உள்ளார்கள்.

முக்கியமாக அர்ப்பணிக்கும் பொருளோடு வேறு பத்து பொருள்களும் படைக்கப்படுகின்றன. இவை ஊர்வலமாக முக்கிய தெருக்களில் எடுத்துச் செல்லப்படுகின்றன. இசைக்கலைஞர்களும், கருப்புத் தொப்பிகள் அணிந்த நடனக் கலைஞர்களும், லாமாக்களும் உள்ளூர் மக்களும் வண்ண ஆடைகள் அணிந்து ஊர்வலத்தில் செல்கிறார்கள்.

ஊர் எல்லையில் மக்கள் நின்று அர்ப்பணிக்கப்பட்டவற்றை எரித்து களிக்கிறார்கள். இது கொடிய பிசாசுகளை அழித்து தங்களைக் காக்கும் என அவர்கள் நம்புகிறார்கள்.



# புனிதநீறு புதன்

ஆஷ்வெட்நெஸ்டே எனப்படும் புனிதநீறு புதன் கிழமை இந்த ஆண்டு பிப்ரவரி 20 அன்று வருகிறது. இந்த நாளில் கிருஸ்துவர்கள் தம் நெற்றியில் சாம்பலால் சிலுவை வடிவைப் பூசிக்கொள்கிறார்கள். இப்படிப்பூசிக் கொள்வது அவர்கள் செய்த சிறிய பெரிய பாவங்களுக்காக மனம் வருந்துவதைக் காட்டுவதற்குத் தான். மதப் பாதிரியார் மாஸ் (பிரார்த்தனை) ஆரம்பமாகும் முன் அங்கு கூடிஇருக்கும் யாவர் நெற்றியிலும் புனித நீற்றால் சிலுவைச்சின்னத்தை வைக்கிறார்.

இந்தப் புனித நீறு பனங்குருத்து ஓலைகளிலிருந்து தயாரிக்கப்படுகிறது. இந்தக்குருத்துகள் முந்தைய ஆண்டில் 'பாம் சண்டே' அன்று ஆசிகள் பெற்றவை. இவற்றின் நீறு புனித நீரால் தெளிக்கப்பட்டு சுத்தமாகிறது.

ஏசுநாதர் தாம் அறிவுரை கூறத் தொடங்குவதற்கு முன் நாற்பது நாட்கள் உண்ணாநோன்பை தனிமையில் காட்டில் இருந்து மேற்கொண்டாராம். கிருஸ்துவர்கள் இதை நினைவு



கொள்கிறார்கள். 'ஆஷ் வெட்னஸ்டே' நாற்பது நாளைய புனிதமடைந்த காலத்தையும் தியானத்தையும் குறிக்கிறது. இதன் ஆரம்ப நாள் லென்ட் எனப்படுகிறது. இந்த நாற்பது நாட்களில் கிருஸ்துவர்கள் மாமிசம் புசிப்பது இல்லை.

# 24. கதைத்தொகுப்புகளின் கதை



பள்ளியில் ஆண்டு விழா நாளன்று நடிக்கப்பட்ட சாகுந்தல நாடகம் வெற்றிகரமாக நடந்தது. சேகர் கண்வ முனிவர் பாத்திரத்தை ஏற்று அதில் நடித்துப் பாராட்டுதல்கள் பெற்றான். சேகரின் நண்பன் பிரதீப் ''சேகர்! இந்த ஆச்சரியத்தைப் பார்த்தாயா? பல நூற்றாண்டுகளுக்கு முன் எழுதப் பட்ட ஒரு நாடகம் இன்றும் பார்த்து ரசிக்கும்படி உள்ளதை கவனித்தாயா? விக்கிரம மன்னர் இதைக் கண்டு மகிழ்ந்தது போல உன் தாத்தாவும் அவரைப் போலவே ரசித்திருப்பார் என நினைக்கிறேன்'' என்றான்.

அப்போது பேராசிரியர் சோமநாதர் ''நான் நாடகத்தை மிகவும் ரசித்தேன். ஆனால் விக்கிரம மன்னர் என்னை விடப் பன்மடங்கு அதிகமாகவே அக் காலத்தில் ரசித்திருந்திருப்பார். ஏனெனில் அக்காலத்தில் நாடகங்களை நடித்துக் காட்டுவது மிகவும் சிரமமானது என்றாலும் மிகவும் ரசித்துப் பாராட்டப்பட்டன. மேலும் சாகுந்தலம் எழுதப்பட்ட சம்ஸ்கிருதத்தை நன்கு படித்திருந்த காரணத்தால் மன்னரும் மற்றவர்களும் அதைப் பார்த்தும் கேட்டும் ரசித்தார்கள். அந்த நாடகத்தை மற்ற மொழிகளில்

பாரதீயன்



மொழியாக்கம் செய்யும் போது அதன் இலக்கிய நயம் குன்றி விடுகிறது'' என்றார்.

அப்போது சியாமளா ''தாத்தா! இந்த விக்கிரமாதித்த மன்னர் தானே காளிதாசரைப் பெரிதும் ஆதரித்து வந்தவர்?'' என்று கேட்டாள். சோம நாதரும் ''வரலாற்றில் நீ ஒரு விக்கிர மாதித்தரைப் பற்றிப் படித்திருக்கி றாய். நம் நாட்டில் விக்கிரமாதித்தன் என்ற பெயரை வைத்துக் கொண்ட பல மன்னர்கள் இருந்திருக்கிறார்கள். விக்கிரமாதித்தன் என்பதற்கு சூரியன் போன்ற பராக்கிரமசாலி என்பது பொருளாம். இப்படிப் பெயருடைய வர்கள் ஒருவர் இரண்டாவது சந்திர குப்தர். இவர் குப்தவம்ச மன்னர். இவர் உஜ்ஜயினைத் தலைநகராகக் கொண்டு நாட்டை ஆண்டு வந்தார். இவர் கி. பி நான்காவது நூற்றாண்டில் இருந்ததவர். இன்னொரு விக்கிரமா தித்தர் கி. மு முதலாவது நூற்றாண்டில் இருந்த சக்தி வாய்ந்த மன்னர். இவரது ஆட்சியை நினைவில் கொள்ள விக்கிர சகாப்தம் என்பது தற்போது வழக்கத்தில் உள்ளது. இது கி. மு 58ல் ஆரம்பமாகியது. ஆனால் வரலாற்று நூல்கள் இந்த விக்கிரமாதித்தரைப் பற்றி எதுவும் கூறவில்லை. காளி தாசர் எந்த விக்கிரமாதித்தர் காலத்தில் இருந்தார் என்பது தெரியவில்லை. கி.பி முதலாவது நூற்றாண்டில் உஜ்ஜயினில் விக்கிரமாதித்தன் என்ற ஒரு மன்னன் இருந்தான். விக்கிரமா தித்தனும் வேதாளமும் என்ற கதை களை எழுதிய குணாத்தியர் என்ற வரும் கி. பி முதலாவது நூற்றாண்டில் இருந்தவரே. அவர் அப்போது வாழ்ந்த விக்கிரமனைப் பற்றியே அக் கதைகளை எழுதி இருக்க வேண்டும்'' என்றார்.

அப்போது சேகர் ''தாத்தா! எங்கள் ஆசிரியரோ சோமதேவர் என்பவர் தாம் அக்கதைகளை எழுதினார் என்று கூறுகிறாரே'' என்று தன் சந்தேகத் தைத் தீர்த்துக் கொள்ளக் கேட்டான்.

சோமநாதரும் ''உன் ஆசிரியர் கூறியதும் தவறல்ல. நான் சொல்வ தும் பொய்யல்ல. சோமதேவர் இயற் றிய 'கதாசரித்சாகரம்' என்ற உலகப் புகழ் பெற்ற நூலை எழுதியவர். வேதாளக் கதைகள் இந்த கதாசரித் சாக'ரத்தின் ஒரு பகுதி தான். ஆனால் கதாசரித் சாகரமே மற்றொரு நூலான பிருஹத்கதா' வின் ஒரு பகுதி தான்.



இதை குணாத்தியர் என்பவர் ஆயிரம் வருடங்களுக்கு முன் எழுதினார். அதில் இன்னும் எவ்வளவோ கதைகள் இருந்தன. அவை எல்லாம் தொலைந்து போயின'' என்று மேலும் தொடர்ந்தார்.

இப்போது பைதன் எனப்படும் ஊர் முன்பு பிரதிஷ்டானம் என்று பெயர் பெற்றிருந்தது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் சாதவாகன மன்னர்கள் அதைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தார்கள். குணாத்தியர் அந்த மன்னர் ஒருவர் அவையிலிருந்த பண்டிதர்.

ஒரு முறை மன்னன் குணாத்தியரிடம் சம்ஸ்கிருதம் கற்க விரும்புவதாக கூறினான். அவரோ அவன் சம்ஸ்கிருதம் கற்றுக் கொள்ளப்பல வருடங்கள் பிடிக்கும் என்று கூறினார். ஆனால் வேறொரு பண்டிதர் தன்னால் மன்னனுக்கு ஆறே மாதத்தில் அம்மொழியைக் கற்பித்து எல்லாம் புரிந்து கொள்ளும்படி செய்து விட முடியும்'' என்றார்.

குணாத்தியர் அப்போது ''நீ இவ்வாறு கற்றுக் கொடுத்து விட்டால் நான் சம்ஸ்கிருதத்தில் எழுதுவதையே நிறுத்தி விடுகிறேன்'' என்று ஆவேசத்துடன் கூறினார்.

மன்னன் மிகுந்த ஆர்வத்துடன் அந்த ஆசிரியரிடத்தில் ஆறே மாதத்தில் சம்ஸ்கிருதத்தை மிக நன்றாகக் கற்றுக் கொண்டு விட்டான். அதனால் குணாத்தியர் சம்ஸ்கிருதத்தில் எழுதுவதை நிறுத்தியதோடு நில்லாமல் அந்த ஊரை விட்டே போய் விட்டார்.

குணாத்தியர் இமயம் முதல் குமரி வரை சென்று நூற்றுக்கானவர்களைக் கண்டு ஆயிரக் கணக்கில் கதைகளைக் கேட்டுக் கொண்டு சென்றார். அவற்

றைப் பல பகுதிகளாக எழுதி, அந்த ஓலைச் சுவடிகளை பிரதிஷ்டான நகருக்கு எடுத்துச் சென்றார். அங்கு மன்னர் தன்னை ஆவலுடன் வரவேற்பார் என அவர் எதிர்பார்த்தார். ஆனால் அவன் அமைதியாக இருக்கவே அவரது மனம் மிகவும் வேதனைப் பட்டது.

அவர் தான் எழுதிக் கொண்டு வந்த ஓலைச் சுவடிகளை ஒரு மலை மீது எடுத்துச் சென்றார். அங்கு மேகங்கள் சூழ்ந்து இருளாக்கியது. அவர் நெருப்பை மூட்டி ஓலைசுவடிகளைப் படிக்கலானார். இயற்கை அவருக்கு அனுகூலமாக இல்லாததால் கோபமுற்று தாம் படித்த பகுதியை நெருப்பில் போட்டு எரித்து விட்டார்.

அடுத்த பகுதி மிருகங்கள், பறவைகள், மரங்கள் ஆகியவற்றை பற்றியவை. அவர் அச்சுவடியை எடுத்துப் படித்த போது மிருகங்களும் பறவைகளும் வந்து அதைக் கேட்டன. ஆனால் அவர் அச்சுவடிகளையும் நெருப்பில் போட்டு எரித்து விட்ட போது அவை கத்திக் கொண்டே ஓடி விட்டன. இப்படியே அவர் தம் சுவடிகளை எரித்துக் கொண்டிருந்த போது அவ்விஷயத்தை சிலர் ஓடிப் போய் மன்னனிடம் கூறினார்கள்.

மன்னன் ஓடோடி வந்து அவரைக் கட்டித் தழுவிக் கொண்டு அங்கு எரிந்து கொண்டிருந்த நெருப்பை அணைத்து விட்டான். அதற்குள் அவர் எழுதிய நான்கு பகுதிகள் எரிந்து போய் ஒரே ஒரு பகுதி தான் மிஞ்சியது. அந்த ஒரு பகுதியை கஷ்மீர மன்னர் அனந்தரின் தர்பாரில் இருந்த சோமதேவர் சம்ஸ்கிருதத்தில் மொழியாக்கம் செய்தார். இது பதினொன்றாவது நூற்றாண்டில் நடந்தது.

இதைக் கூறி சோமநாதர் ''இக்கதைகளெல்லாம் நீதிகளைப் புகட்டுபவை'' எனக் கூறி முடித்தார்.





# விநாயகர்

தேவர்களும் அசுரர்களும் ஒன்றாகக் கூடி பாற்கடலைக் கடைந்து அமிர்தத்தை அடைந்தார்கள். அசுரர்கள் அமிர்தத்தைக் குடித்தால் அபரிமித பலம் பெற்று அதிக அளவில் அட்டூழியங்களைப் புரிவார்கள் என எண்ணி விஷ்ணு மோகினி உருவில் வந்தார். அவர் அசுரர்களை ஏமாற்றி தேவர்கள் மட்டுமே அமிர்தத்தைக் குடிக்குமாறு செய்தார். இதனால் தேவர்களின் கர்வம் அதிகரித்தது.

அசுரர்களுக்கு அநீதி இழைக்கப் பட்டுவிட்டதாக எண்ணி தேவர்களைப் பழிவாங்க தாரகாசுரன் பிரம்மாவை நோக்கி கடுந்தவம் புரிந்தான். பிரம்மா அவன்முன் தோன்றவே அவன் தான் சாகாமல் இருக்கும்படி வரம் அளிக்குமாறு வேண்டினான். பிரம்மாவோ ''பிறந்தவர் என்றாவது இறந்தே ஆக வேண்டும். எனவே வேறு வரம் கேள்'' எனவே அவனும் ''அப்படியானால் நான் சிவபிரானுக்குப் பிறக்கும் மகனின் கையால் மரணம் அடைய வேண்டும்'' எனக் கோரினான். பிரம்மாவும் அந்த வரத்தைக் கொடுத்துவிட்டு மறைந்தார்.

இச்சமயத்தில் தான் சிவபிரானின் மனைவி தாட்சாயணி யாகத் தீயில் தன் உடலை அழித்துக் கொண்டாள். இதனால் சிவபிரான் விரக்தி அடைந்து இமயமலைப் பகுதியில் அலைந்துத் திரிந்து முடிவில் ஓரிடத்தில் அமர்ந்து தியானத்தில் ஆழ்ந்தார்.

தாரகாசுரன் பெரும் ராட்சஸப் படையுடன் தேவலோகத்தைத் தாக்கி தேவர்களைக் கதறக்கதற அடித்தான். இந்திரன் முதலிய தேவர்கள் பயந்து பிரம்மாவிடம் போய் முறையிடவே, அவரும் தான் தாரகாசுரனுக்குக் கொடுத்த வரம் பற்றிக் கூறி ''நாம் விஷ்ணுவைக் கண்டு பேசி இதற்கு வழி காண்போம்'' என்று கூறி



அவர்களை அழைத்துக் கொண்டு வைகுண்டத்திற்குச் சென்றார்.

விஷ்ணுவும் ''தாட்சாயணி இப் போது இமவானின் புதல்வி பார்வதி யாகப் பிறந்திருக்கிறாள். பார்வதிக் கும் பரமசிவனுக்கும் திருமணம் நடக்கும்படிச் செய்யுங்கள்'' என்று யோசனை கூறினார்.

தேவர்கள் நாரதரை இமவானிடம் அனுப்பினார்கள். நாரதர் கூறிய யோசனைப்படி இமவானும் தியா னத்திலுள்ள சிவ பெருமானை அணுகி, ''ஐயனே! தங்களுக்குப் பணிவிடை செய்ய என் மகள் பார் வதியை அனுமதிக்க வேண்டும்,'' என்று வேண்டினான்.

சிவபிரான் மௌனமாக இருக் கவே, அவர் தன் கோரிக்கையை ஏற்றுவிட்டார் என்றெண்ணி பார்வ தியை அவருக்குப் பணிவிடை செய்ய அனுப்பினான். சிறு வயது முதலே அவளுக்கு சிவபெருமானி டம் ஈடுபாடு உண்டு. நாரதர் வாயி லாக அவள் சிவபிரானின் அருமை பெருமைகளை அறிந்திருந்தாள். தான் மணப்பது என்றால் சிவபிரா னைத் தான் என அவள் தீர்மானித் தாள். எனவே அவள் முழு மனதுடன் அவருக்குப் பணிவிடைகள் செய்து வரலானாள்.

சிவபெருமான் தியானத்தில் அமர்ந்திருக்கும் இடத்தை சுத்தமாகப் பெருக்கி, நீர் தெளித்துக் கோலம் போட்டதோடு அவர் விரும்பும் வில்வ இலைகளையும் பழங்களை யும் தினமும் அவள் அவர்முன் அர்ப்பணித்து வந்தாள். இன்னிசை யால் பல ராகங்களில் அவரைப் புகழ்ந்து பாடியும் வரலானாள்.

தியானத்தில் மூழ்கி இருந்த சிவ பெருமானோ பார்வதியைப் பார்க் கவே இல்லை. பார்வதியோ தன்னை அவர் எப்போது பார்க்கப் போகிறார் என்று ஏங்கலானாள். சிவபெருமா னுக்கு மகன் பிறந்தாலே தாரகாசுரன் இறக்க வழி பிறக்கும் என எண்ணிய தேவேந்திரன் பார்வதிக்கும் சிவ பெருமானுக்கும் திருமணம் நடக்க வேண்டும் என்பதற்காக மன்மதனின் உதவியை நாடினான்.

முதலில் தயங்கிய மன்மதன் ''சிவபிரானின் தவத்தை நான் கலைத்தால் அவரது கோபத்திற்கு ஆளாகி நான் அழிந்து போய் விடு வேனே'' எனக் கூறிப் பார்த்தான்.

இந்திரன் அவன் அதைச் செய்தே ஆக வேண்டும் என்று வற் புறுத்தவே மன்மதனும் தேவர்களின் நலனுக்காக அதைச் செய்வதாக ஒப்புக் கொண்டான்.

வசந்தன் தேரை ஓட்ட, மன்மதன் தன் கரும்பு வில்லோடு மனைவி ரதிதேவியுடன் சிவபெருமான் தியா னத்தில் அமர்ந்திருக்கும் இடத்தை அடைந்தான். அவர்கள் அங்கு சென்ற தும் சுற்றிலும் மலர்கள் பூத்துக் குலுங்கின. நறுமணம் நான்கு திசை களிலும் பரவியது. குயில்கள் கூவ, வண்டுகள் ரீங்காரம் செய்ய மயில்கள் தோகை விரித்து ஆடின. திடீரென சுற்றிலும் மாறுதல் ஏற்பட்டதை சிவ பிரான் உணர்ந்தார். அவர் கண்களைத் திறந்து பார்த்த போது தம் எதிரில் பார்வதி நிற்பதைக் கண்டார்.

இது தான் தக்க சமயம் என்று எண்ணி ஒரு புதரின் பின் மறைந்தி ருந்த மன்மதன் சிவபெருமானை நோக்கித் தன் மலர்க்கணையை எய் தான். அது அவரது மார்பைத் தாக்கி யது. உடனே அவர் அதை யார் எய்தது என்று பார்த்தார். புதரில் மறைந்தி ருந்த மன்மதனைப் பார்த்து அவர் தன் மூன்றாவது கண்ணைத் திறந்தார். அதி லிருந்து வெளிப்பட்ட வெப்பமான ஒளி மன்மதனைத் தாக்கவே அவன் எரிந்து சாம்பலாகி விட்டான்.

தன் தியானம் கலைந்ததால் கோபம் கொண்டு அங்கிருந்து அவர் கைலாச பர்வதத்திற்குப் போய் விட் டார். மன்மதனோடு வந்த ரதிதேவி தன் கணவன் இறந்ததைக் கண்டு கண்



ணீர் உகுத்துத் தீக்குளிக்க முயன்றாள். அதைக் கண்ட தேவர்கள் அவளைத் தடுத்து ஆறுதல் கூறி பார்வதிக்கும் சிவபெருமானுக்கும் திருமணம் நடக் கும் போது மன்மதன் உயிர் பெற்று வந்து விடுவான் எனக் கூறினார்கள். அவளும் மனம் தேறி மன்மதன் எரிந்த தால் மிகுந்த சாம்பலைப் பாது காத்துக் கொண்டிருந்தாள்.

பார்வதியோ அது வரை தன் அழ கைப் பற்றி கர்வம் கொண்டிருந்தாள். சிவபிரான் ஒரு முறை தன்னைப் பார்த்து விட்டால் அவர் தம் மனதைப் பறி கொடுத்து விடுவார் என நம்பி னாள். ஆனால் அவர் கண் திறந்து பார்த்தும் லட்சியம் செய்யாது அங்கி ருந்து போய் விட்டது கண்டு அவள் வேதனை அடைந்தாள். எனவே அவள் சிவபிரானைக் குறித்துத் தவம்



செய்வது என்று தீர்மானித்துக் கொண்டாள். எதையும் உண்ணாமல் ஆரம்பத்தில் கொஞ்சம் இலைகளை மட்டும் உட்கொண்டு வந்த அவள் போகப் போக அதையும் கூட உட்கொள்ளவில்லை. அதனால் அவளை அபர்ணா என்று எல்லோரும் அழைக்கலாயினர். கைலாச பர்வதத்திற்குச் சென்றதும் சிவபிரானை மன்மதன் எய்த அம்பு வாட்டியது. பார்வதியின் கடும் தவம் அவரை இளக வைத்தது. மாறு வேடத்தில் வந்து அவர் பார்வதியைப் பரீட்சித்தார். அவள் உண்மையிலே தன்னை விரும்புகிறாள் என அறிந்து அவர் மகிழ்ச்சி அடைந்தார். எனவே சப்தரிஷிகளை இமவானிடம் திருமணம் பற்றிப் பேசுமாறு அவர் அனுப்பினார். இமவான் அது கேட்டுப் பூரித்துப் போனான். விரைவிலே திருமணம் நடக்க நாளும் குறிப்பிடப்பட்டது. சிவபிரான் தமதுகணங்களுடன் இமவானின் இருப்பிடத்தை அடைந்தார். பிரம்மா, விஷ்ணு, இந்திரன், தேவர்கள் என யாவரும் அத்திருமணத்தைக் காண வந்தார்கள். சப்த ரிஷிகளும் நாரதரும் முனிவர்களும் கூட்டம் கூட்டமாக அங்கு வந்து சேர்ந்தார்கள். சிவபிரான் மாப்பிள்ளைக் கோலத்தில் வர பார்வதி பல வித ஆபரணங்களை அணிந்து அழகு தேவதையாக வந்தாள்.

இமவான் அவர்களது திருமணத்தை விஷ்ணுவின் ஆதரவைக் கொண்டும் மற்ற பெரியோர்களின் வாழ்த்துக்களிடையேயும் நடத்தி முடித்தான். கிருகப் பிரவேசத்திற்கு சிவபெருமானுக்காக சிறப்பாக ஒரு இல்லத்தை தேவலோக சிற்பியான விசுவகர்மா அமைத்துக் கொடுத்தார். சிவபெருமானும் பார்வதியும் கை கோர்த்துக் கொண்டு அந்த இல்லத்தினுள் சென்றார்கள். வழியில் சிவபெருமான் ரதிதேவி சாம்பல் குவியலருகே நிற்பதைக் கண்டார்.

பார்வதியும் சிவபெருமானும் அவளருகே போய் அவள் தீர்க்கசுமங்கலியாக இருக்க வேண்டும் என்று வாழ்த்தினார்கள். சிவபிரான் தன் மூன்றாவதுக் கண்ணைத் திறந்து குளிர்ந்த கிரணங்களை அச்சாம்பலின் மீது விழச் செய்தார். மறு விநாடியே மன்மதன் உயிர் பெற்று எழுந்து வந்தான்.

அப்போது சிவபிரான் ரதிதேவி

யிடம் ''பெண்ணே! உன் கணவன் உயிர் பெற்று விட்டான். இனிமேல் அவன் பிறர்களுக்குத் தென்பட மாட்டான். ஆனால் உனக்கு மட்டும் எப்போதும் தென்படுவான். இப்படி அவன் இருப்பது அவனுக்கே நல்லது. யாராலும் அவனை எதுவும் செய்ய முடியாது. அவன் எய்யும் அம்புகளிலிருந்து யாரும் தப்ப முடியாது. நீ எப்போது விரும்பினாலும் அவனைப் பார்க்கலாம். இப்படிப்பட்ட வரத்தை உனக்கு அளிக்கிறேன்'' என்றார்.

பார்வதியும் சிவபிரானும் பிறகு கிரகப் பிரவேசம் செய்தார்கள். அவர்களுடன் திருமணத்திற்கு வந்திருந்த யாவரும் அந்தப் புதிய இல்லத்தினுள் சென்றார்கள். முனிவர்களின் மனைவிகள் அருந்ததியின் தலைமையில் ஆரத்தி எடுத்தார்கள். அப்போது விசுவசர்மா திரையால் மறைக்கப்பட்ட பலகை ஒன்றை அத்தம்பதிகளின் முன்னால் வைத்து அவர்களிடம் ''இது ஒரு அதிசயமான சித்திரம். இதில் இருவரது உருவங்கள் சித்தரிக்கப்பட்டுள்ளன. இந்த இருவரில் யார் மிக அழகானவர் என்பதைக் கண்டு சொல்ல எம் போன்றவர்களால் முடியவில்லை. உங்களால் தான் தீர்வு காண முடியும் என நம்புகிறோம். தயவு செய்து கூறுங்கள்'' எனச் சொல்லி மறைத்திருந்த திரையை விலக்கினார்.

அது ஒரு நிலைக் கண்ணாடி. அதில் அவர்களிருவரும் தம் உருவங்களைப்பார்த்துப் புன்னகை புரிந்தார்



கள். அப்போது நாரதர் ''புன்சிரிப்பு இவர் கேட்டதின் விடையாகி விடாது'' என்றார்.

சிவபெருமான் பார்வதியைச் சுட்டிக் காட்டி ''இவளே பேரழகி'' என்றார். பார்வதியோ ''இந்த முக்கண்ணர்தாம் மிகமிக அழகானவர். இவருக்கு இணை யாருமே இல்லை'' என்றாள்.

யாவரும் அத்தம்பதிகளிடம் விடை பெற்றுக் கொண்டு அவர்களைத் தனியே விட்டு விட்டுச் சென்றனர். அப்போது அவர்கள் சுவரில் அதிசயமான சித்திரம் வரையப்பட்டிருப்பதைக் கண்டார்கள். அந்தப் படத்தின் மத்தியில் இரு யானைகள் தம் முன்னங்கால்களைத் தூக்கிக் கொண்டு எதிர் எதிராக நின்று நாட்டியம் ஆடுவது போன்ற நிலை வரையப்பட்டிருந்தது. அந்த இரு

யானைகளுக்குப் பின்னால் ஒரு குளம் இருக்க அதில் ஒரு தாமரை மலர் விரிந்திருப்பதாகக் காட்டப்பட்டிருந்தது. சிவபெருமானும் பார்வதியும் வரையப்பட்டிருந்த இரு யானைகளைப் பார்த்தார்கள்.

அப்போது அவற்றிடையே ஒரு ஒளி கிளம்பியது. அது பெரிதாகிக் கொண்டே போய் எங்கும் பரவியது. அதில் நல்ல நிறத்தில் தேஜசுடன் கூடிய விக்கினேஸ்வ ரனை அவர்கள் கண்டார்கள்.

விக்கினேஸ்வரரின் முகம் யானை முகமே என்றாலும் அது ஒளி மிக்கதாய்க் காணப்பட்டது. மகிழ்ச்சி ததும்பும் முகம். அமைதியை வெளிப்படுத்தும் கண்கள். வலுவான உடல். பெரிய தொந்தி. அபயம் அளிப்பது போன்ற கை. இதை எல்லாம் கண்டு பார்வதி மிகவும் சந்தோஷப்பட்டாள்.

விக்கினேஸ்வரைப் பார்த்து பார்வதியும் சிவபிரானும் ஆனந்தம் அடைந்தார்கள். அவர்கள் விக்கினேசுவரனைக் கண்கொட்டாமல் பார்த்தார்கள். விக்கினேசுவரர் அழகான சொற்களில் அவர்களைப் பார்த்து ''நான் விக்கினேசுவரன். எந்தத் தடையையும் அகற்றும் விநாயகன். கணங்களின் அதிபதி. அற்புத ஆனைமுகத்தோன். உங்கள் இருவருக்கும் குமரன் பிறந்து தாரகாசுரனை ஒழிப்பான். ஆனால் அவன் பிறப்பதற்கு முன் நான் உங்கள் மகனாக அவதரிப்பேன்'' எனக் கூறினார்.

பார்வதி அவரைத்தூக்கிக் கொள்ள கை நீட்டினாள். ஆனால் அவர் அவளது கைகளுக்கு அகப்படவே இல்லை. திடீரென்று மாயமாய் மறைந்தார். அது கண்டு அவர்கள் இருவரும் ஆச்சரியப்பட்டார்கள். அவர்கள் அந்த இல்லத்தில் ஆனந்தமாகப் பொழுதைக் கழித்துக் கொண்டிருக்கையில் ஒரு மாபெரும் ஆபத்து உலகிற்கு வந்தது!





# விநோத வீணை

ஒரு சங்கீத வித்வானுக்கு மூன்று மகன்கள் இருந்தார்கள். அவர்கள் தம் தந்தையோடு சேர்ந்து கச்சேரிகள் செய்து வந்தார்கள். கொஞ்சகாலத்திற்குப் பின் அந்த வித்வானை ஏதோ ஒரு நோய் தாக்கியது. அதனால் அவரது கை விரல்கள் வளைந்து கோணலாகி விட்டன. அவரைப் பரீட்சித்துப் பார்த்த உள்ளூர் வைத்தியர் ''இது சாதாரண வியாதி அல்ல. எந்த வைத்தியராலும் இதை குணப்படுத்த முடியாது. மிகவும் திறமை பெற்றவரும் மன்னனின் வைத்தியருமான சஞ்சீவய்யாவால் தான் முடியும். அதற்கு மன்னன் அனுமதிக்க வேண்டும். நம் மன்னனோ முழு முட்டாள். அவன் மனது வைத்தாலே உங்கள் தந்தை குணமடைவார்'' என்றார்.

அதைக் கேட்டதும் வித்வானின் மூத்த மகன் ''நான் போய் மன்னனின் முன் வீணை வாசித்து அவரை மகிழ்வித்து ராஜவைத்தியரை இங்கு அழைத்து வந்து என் தந்தையை குணப்படுத்திவிடுகிறேன்'' எனக் கூறிவிட்டுத் தன் வீணையை எடுத்துக் கொண்டு தலைநகருக்குச் சென்றான். அவன் மன்னனைக் கண்டு, ''அரசே! நான் மிக நன்றாக வீணை வாசிப்பவன். என் வாசிப்பைக் கேட்டு நீங்கள் மகிழ்வீர்கள். அதற்குப் பரிசாக நீங்கள் உங்கள் வைத்தியரான சஞ்சீவய்யாவை என் தந்தைக்கு வைத்தியம் செய்ய அனுப்ப வேண்டும்'' என வேண்டினான்.

மன்னனோ, ''வீணை வாசிப்பது ஓர் அதிசயமா? இந்நாட்டில் எவ்வளவோ வீணை வித்வான்கள் இருக்கிறார்கள். என் அரண்மனைக் காவலாளி கூட மிக இனிமையாக வீணை வாசிப்பவனே. இவ்வளவு ஏன்? நானே மிக நன்றாக வீணை வாசிப்பவன். என்னுடன் நீ போட்டி போட்டு என்னை வென்றால் நீ சங்சீவய்யாவை உன் ஊருக்கு அழைத்துப் போகலாம்'' என்றான்.

மூத்த மகனும் அதற்குச் சம்மதிக்

– பாபநாசம் சாமா –



கவே அவர்களது போட்டி நடுவர்கள் முன் நடந்தது. மூத்த மகன் மன்னனை விட மிக நன்றாக வீணை வாசித்த போதிலும் நடுவர்கள் மன்னனுக்குப் பயந்து போட்டியில் மன்னனே வெற்றி பெற்றதாக அறிவித்தனர். போட்டியில் தோற்ற மூத்த மகனுக்கு சவுக்கடிகள் கொடுத்து மன்னன் அவனை அனுப்பிவிட்டான்.

தன் அண்ணனின் முயற்சி வெற்றி பெறாததைக் கண்ட இரண்டாவது மகன் ''நான் மன்னனுடன் மிருதங்கம் வாசித்துப் போட்டி போட்டு அவனை வெல்கிறேன். மிருதங்கம் வாசிப்பது மிகக் கடினம். அதனால் மன்னன் கண்டிப்பாக என்னிடம் தோற்றுவிடுவான். அப்போது நான் ராஜவைத்தியரை அழைத்துக் கொண்டு இங்கு வருகிறேன்'' எனக் கூறித் தன் மிருதங்கத்துடன் தலை நகருக்குச் சென்றான்.

அவன் மன்னனைக் கண்டு ''நான் மிக நன்றாக மிருதங்கம் வாசிப்பவன். என் வாசிப்பைக் கேட்டுவிட்டு எனக்குப் பரிசாக தங்கள் வைத்தியரை என் தந்தைக்கு சிகிச்சை செய்ய அனுப்பி வைக்க வேண்டும்'' என வேண்டினான். மன்னனும் ''ஓகோ! நீ சொல்வதைப் பார்த்தால் இரண்டு நாட்களுக்கு முன் இங்கு வந்த வீணை வித்வானின் தம்பி என்று தெரிகிறது. எனக்கும் மிருதங்கம் வாசிக்கத் தெரியும். என்னுடன் போட்டி போட்டு வென்றால் தான் நீ என் வைத்தியரை அழைத்துப் போகலாம். தோற்றால் சவுக்கடி தான். போட்டி போட சம்மதமா?'' என்று கேட்டான். அவனும் சம்மதிக்கவே போட்டிக்கு ஏற்பாடாயிற்று. இரண்டாவது மகன் மன்னனைவிட மிருதங்கம் நன்கு வாசித்த போதிலும் நடுவர்கள் மன்னனுக்கு பயந்து அவனே வெற்றி பெற்றதாக அறிவித்தார்கள். இரண்டாவது மகன் சவுக்கடி பெற்று தன் ஊருக்கு வந்து சேர்ந்தான்.

அவன் சொன்னதைக் கேட்ட மூன்றாவது மகன் ''நான் அந்த மன்னனுக்குச் சரியான பதிலடி கொடுத்து வைத்தியரை அழைத்து வருகிறேன்'' எனக் கூறி மிருதங்கம், வீணை, குட்டை நாதஸ்வரம் ஆகியவற்றை எடுத்துக் கொண்டு தலைநகரை அடைந்தான். அவன் ஜனநடமாட்டமே இல்லாத இடத்தில் அமர்ந்து

வீணையை மீட்டி இசைத்து, மிருதங் கத்தை அடித்து, குட்டை நாதஸ்வ ரத்தை ஊதிதொடர்ந்து மூன்று நாட் கள் இவற்றையே செய்தான். அவனது விரலிலிருந்து ரத்தம் கசிந்தது.

இந்த விசித்திர சம்பவத்தை சிலர் மன்னனிடம் சொல்லவே அவன் மந்திரிகளுடன் வந்து மூன்றாவது மகனைப் பார்த்தான். அவனைப் பற்றி மன்னன் விசாரிக்கவே, அவன் இவ்வாறு கூறலானான்.

''அரசே! என் ஊர் மலை அடி வாரத்திலுள்ள புலியூர் என்ற சிறு கிரா மம். அவ்வூருக்கு எங்கிருந்தோ ஒரு சிறுவன் வந்து தினமும் என்னுடன் விளையாடிவிட்டுப் போவான். ஒரு நாள் அவன் பனம்பழம் தின்ன ஆசைப்படவே, கத்தியை எடுத்துக் கொண்டு அவனுடன் கிளம்பினேன். ஊருக்கு வெளியே உள்ள குளத்தைக் கண்டதும் அதில் குளிக்க அவன் குதித்துவிட்டான். நீரில் முங்கிய அவன் வராமல் போகவே அவனை காப்பாற்ற நானும் குளத்தில் குதித்து முங்கிக் குளத்தின் அடிப்பரப்பை அடைந்தேன். அங்கு பயங்கரமான ராட்சஸப் பாம்பு ஒன்று அச்சிறு வனைத் தன் வாயில் கவ்விக் கொண்டி ருந்தது. நான் சற்றும் தாமதியாமல் கத்தியால் அப்பாம்பின் உடலைக் கிழித்துக் கொன்று அச்சிறுவனைக் காப்பாற்றினேன். அவன் எனக்கு நன்றி தெரிவித்துத் தொலைவிலுள்ள தன் இருப்பிடத்திற்கு என்னை அழைத்துச் சென்றான். அது ஒரு மலைக் குகை. அதில் ஒரு மந்திரக்



காரி இருந்தாள். அவள் பார்க்க விகார மாக இருந்தாள். என் நண்பன் அவளை அணுகியதும் அவள் பரிவு டன் ''எங்கேயப்பா போனாய்? உனக் காக என்னவெல்லாம் சமைத்து வைத்திருக்கிறேன், பார்!'' என்றாள்.

அச்சிறுவனும் என்னைக் காட்டி, ''இவன் என் நண்பன். இன்று இவன் என்னை விழுங்க இருந்த ஒரு ராட் சஸப் பாம்பைக் கொன்று என்னைக் காப்பாற்றினான்'' எனக்கூறிக் குளத் தில் நடந்ததைக் கூறினான். அதைக் கேட்ட மந்திரக்காரி ஏதோ ஒரு மையை சுவற்றில் சதுர வடிவில் தடவினாள். பிறகு ஏதோ மந்திரத்தை அவள் உச்சரிக்கவே, சுவற்றில் குளத் தின் அடி பரப்பும் அதில் துண்டு துண் டாகிக் கிடந்த ராட்சஸப் பாம்பின் உடலும் தெரிந்தது. அதைப் பார்த்த



மந்திரக்காரி பலமாகச் சிரித்து, இன்னொரு மந்திரத்தை உச்சரிக்கவே துண்டுதுண்டாகக் கிடந்த பாம்பு ஒன்று சேர்ந்து ஒரு மந்திரக்காரியின் உயிரற்ற உடலாக மாறியது. அது கண்டு மந்திரக்காரி ஒரேயடியாக மகிழ்ந்து போய் என்னைத் தட்டிக் கொடுத்து, ''நீ கொன்றது பாம்பை அல்ல, என் பரம விரோதியான மந்திரக்காரியை நீ ஒழித்துவிட்டாய். அவளைக் கொல்ல நான் பலமுறை முயன்றும் முடியாமல் போயிற்று. இன்று நீ அவளைக் கொன்று என் மகனைக் காப்பாற்றினாய். இதற்குப் பரிசாக உனக்கு ஒரு மந்திர வீணையையும் ஒரு மிருதங்கத்தையும் ஒரு குட்டை நாதஸ்வரத்தையும் கொடுக்கிறேன். உன்னால் மந்திர வீணையை நன்கு வாசிக்க முடிந்தால் அதன் சக்தியால் இரு வாலிபர்கள் யார் கண்களுக்கும் புலப்படாமல் வந்து மிருதங்கத்தையும் குட்டை நாதஸ்வரத்தையும் வாசித்து விட்டு மாயமாய் மறைந்து போவார்கள்'' என்றாள்.

நான் அவள் கொடுத்த மந்திர வீணையையும் மிருதங்கத்தையும் குட்டை நாதஸ்வரத்தையும் எடுத்துக் கொண்டு இங்கு வந்தேன். நானும் தொடர்ந்து மூன்று நாட்களாக வீணை வாசித்துக் கொண்டு தான் இருக்கிறேன். மிருதங்கம் வாசிக்கவோ, குட்டை நாதஸ்வரத்தை ஊதவோ யாரும் வரவில்லை. அந்த மந்திரக்காரி என்னை ஏமாற்றிவிட்டாள்.''

இவ்வாறு சங்கீத வித்வானின் மூன்றாவது மகன் சொன்னதும் மன்னன் சிரித்து, ''மந்திரக்காரி உன்னை ஏமாற்றவில்லை. அவள் கூறியபடி உன்னால் வீணையை நன்கு வாசிக்க முடியவில்லை. நான் வாசித்து அவர்களை வரவழைக்கிறேன், பார்!'' எனக் கூறி அவனிடமிருந்து வீணையை எடுத்து உட்கார்ந்து அதை மீட்டி வாசிக்கலானான். அவன் எப்படி வாசித்தும் வீணையின் கம்பிகளே அறுந்தன. மிருதங்கம் அடிக்கவோ, குட்டை நாதஸ்வரத்தை ஊதவோ யாரும் வரவில்லை.

அப்போது மன்னன் ''நான் மிக நன்றாக வாசித்தும் அவர்கள் வரவில்லை. அதனால் வேறு யாராலும் அவர்களை வரவழைக்க முடியாது என்றே நினைக்கிறேன். யாராவது இந்த வீணையை வாசித்து மற்ற

வாத்தியங்களையும் வாசிக்க மாய மாய் வரும் இருவரை வரவழைத்து விட்டால் அவருக்கு நிறையப் பரி சளிப்பதாக நாடெங்கும் பறைசாற்று விக்கிறேன்'' என்றான். பிறகு அந்த வீணையையும் மிருதங்கத்தையும் குட்டை நாதஸ்வரத்தையும் தன் அரண்மனைக்கு அவன் கொண்டு போய்விட்டான்.

இதற்குச் சில நாட்களுக்குப் பின் நவராத்திரிப் பண்டிகை வரவே மன்னன் சரஸ்வதி பூஜை நாளன்று மந்திர வீணைப் போட்டியை வைத் தான். பலர் அந்த வீணையை வாசித் தும் மாயமனிதர்கள் மிருதங்கம் அடிக் கவோ, குட்டை நாதஸ்வரத்தை ஊதவோ வரவில்லை. முடிவில் சங்கீத வித்வானின் மகன் வந்து மன்னனை வணங்கி ''அரசே! நான் வீணை வாசித்து அவ்விருவரையும் வரவழைக்கிறேன்'' என்றான்.

மன்னனும் கேலியாகச் சிரித்து ''சரி, முயன்று பார்'' என்றான். மூன்றாவது மகனும் வீணையருகே அமர்ந்து தன் குல தெய்வத்தை தியானித்துவிட்டு அதை இசைக்கலா னான். அவன் வாசிக்க ஆரம்பித்த சிறிது நேரத்தில் கூட்டத்தில் மாறு வேடத்தில் அமர்ந்திருந்த வித்வா னின் மூத்த மகனும் இரண்டாவது மகனும் எழுந்து வந்தார்கள். ஒருவன் மிருதங்கத்தை வாசிக்க, மற்றவன் குட்டை நாதஸ்வரத்தை வாசித்தான். அந்த மூவரின் இசையையும் யாவ ரும் கேட்டு மெய் மறந்து போனார் கள். சங்கீதத்தில் நன்கு தேர்ச்சி பெற்ற அந்த மூன்று சகோதரர்களும் நல்ல இசைக் கச்சேரி செய்து முடிக்கவே, கூட்டத்தினரின் கரவொலி வானைப் பிளந்தது. அவர்கள் மேடையைப் பார்த்தபோது மாயமாய் வந்த இரு வரும் அங்கே இருக்கவில்லை. எப் படியோ மறைந்துவிட்டார்கள். வீணை வாசித்தவன் மட்டுமே மேடையில் இருந்தான்.

மன்னன் சங்கீத வித்வானின் மூன்றாவது மகனுக்கு ஏராளமான பரிசுகளை அளித்ததோடு அவன் வேண்டிக் கொண்டபடி தனது வைத் தியரான சஞ்சீவய்யாவை அவனுடன் அனுப்பி அவனது தந்தைக்கு வைத்தியம் செய்யுமாறு கூறினான்.





# அபர்ணாவின் நாடகம்

இளைஞனான ஈசுவரனுக்குத் தான் பெயர் பெற்றுப் புகழுடன் வாழவேண்டுமென்ற ஆசை பிறந்தது. பணக்காரனாகி விட்டால் பெயர் பெற்று விடலாம் என எண்ணி அவன் நிறையப் பணம் சம்பாதித்தான். ஆனால் தன்னைப் போல பல பணக்காரர்கள் இருப்பது கண்டு அவன் ஏதாவது வீர தீரச் செயல் செய்து பெயர் பெற எண்ணினான். ஆனால் எந்த வீரச் செயல் செய்வது என யோசித்தபோது அவ்விதச் செயல்களில் எல்லாம் பலர் பெயர் பெற்றிருப்பது கண்டு இனி எதைச் செய்து பெயர் பெறுவது என்று யோசிக்கலானான்.

அப்போது அவனது அத்தை மகள் அபர்ணா அவனிடம் ''அத்தான்! நீங்கள் பெயர் பெற என்னால் ஒரு வழி சொல்ல முடியும். ஆனால் அதற்கு முன் நீங்கள் என்னைத் தான் மணக்கப் போவதாயும் வேறு யாரையும் மணக்க முடியாது என்றும் இந்த ஊரில் எல்லோரிடமும் சொல்லிக் கொண்டே இருக்க வேண்டும்'' என்றாள்.

அதைக் கேட்ட ஈசுவரன் ''அப்படியா? உன் திட்டம் தான் என்ன?'' என்று கேட்டான். அபர்ணாவும் ''முதலில் நான் முதலில் கூறியபடி செய்வதாக வாக்களித்தாலே நான் என் திட்டத்தை விவரிப்பேன்.'' எனவே ஈசுவரனும் அவ்வாறே வாக்களித்தான். அப்போது அபர்ணா ''நம் நாட்டு அரசகுமாரி அடுத்த மாதம் இங்கு வரப் போகிறாள். அவள் உங்களை மணந்து கொள்ளப் போவதாகச் சொல்ல வைக்க வேண்டும். நீங்கள் என்னைத் தவிர வேறு யாரையும் மணக்கப் போவதில்லை என்று உறுதியாகக் கூற வேண்டும். அதைக் கேட்ட யாவரும் உங்களது தியாக

சிவனார் செல்வன்

மனப்பான்மை யைப் பாராட்டுவார்கள். இதனால் உங்கள் பெயர் எங்கும் பரவி விடும்'' என்றாள்.

ஈசுவரனும் ''இது சாதாரண விஷயம். இப்படிச் செய்வதால் எனக்குப் பெரிய பெயர் கிடைத்து விடும் என்று நான் நம்பவில்லை. எதற்கும் நீ சொன்னபடியே செய்கிறேன். பிறகு நடக்கிறபடி நடக்கட்டும்'' என்றான். மறுநாள் முதலில் ஊரில் யாரைச் சந்தித்தாலும் தான் அபர்ணாவைத் தான் மணக்கப்போவதாகவும் வேறு எந்தப் பெண்ணையும் மணக்க முடியாது என்று கூறி வரலானான். ஊராரும் அவன் அபர்ணாவின் மீது வைத்துள்ள அன்பைக்கண்டு வியந்தனர். இப்படியே ஒரு மாதம் கழிந்தது.

ஒரு நாள் அபர்ணா அவசர அவசரமாக ஓடி வந்து ஈசுவரனிடம் ''நாளை நம் ஊரருகே உள்ள காட்டிற்கு அரசகுமாரி வந்து முகாமிட்டு வேட்டையாடப் போகிறாளாம். நீங்கள் போய் உங்கள் திறமையைக் காட்டி நம் திட்டம் நிறைவேறும் படிச் செய்யுங்கள். எதற்கும் முன்னெச்சரிக்கையாக ஒரு கத்தியை எடுத்துச் செல்லுங்கள்'' என்று கூறினாள்.

அபர்ணாவின் சிற்றப்பா மன்னனிடம் வேலை செய்பவர். அவர் வாயிலாகத் தான் அரச குடும்பத்தைப் பற்றிய சமாசாரங்கள் எல்லாம் அபர்ணாவின் குடும்பத்திற்கு அவ்வப் போது தெரிந்தன. இப்படித்தான் அரசகுமாரி காட்டிற்கு வருவது அபர்ணாவுக்குத் தெரிந்தது. அவள் அதை



உடனேயே ஈசுவரனிடம் தெரிவித்து அவனைக் காட்டிற்கு அனுப்பினாள்.

ஈசுவரன் காட்டிற்குள் கொஞ்சதூரம் போனதும், ஒரு பெண் ''என்னைக் காப்பாற்றுங்கள்! காப்பாற்றுங்கள்'' என்று கூக்குரலிடுவது அவன் காதில் விழுந்தது. உடனே குரல் வந்த திசையில் அவன் ஓடினான். ஒரு அழகிய பெண்ணை கடா மீசைக்காரன் ஒருவன் கத்தியைக் காட்டி மிரட்டிக் கொண்டிருந்தான். அதைக் கண்ட ஈசுவரன் தன் கத்தியை எடுத்துக் கொண்டு அந்த முரடனைத் தாக்கினான். கடும் சண்டையின் முடிவில் முரடன் ஈசுவரனின் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் ஓடிப் போய் விட்டான்.

அந்த அழகியும் ''மாவீரரே! சமயத்தில் வந்து என்னை அந்த முரடனிடமிருந்து காப்பாற்றினீர்கள். நான் இந்



நாட்டு இளவரசி சந்திரப்பிரபா'' என்று கூறித் தன்னைத் தானே அறி முகம் செய்து கொண்டாள். பிறகு அவள் தான் அக்காட்டிற்கு ஏன் வர வேண்டியதாயிற்று என்பதை விளக்க லானாள். சந்திரப்பிரபாவின் தாய் மாமன் அவளை விட பதினைந்து வருடங்கள் மூத்தவன். அவன் சந்திரப் பிரபாவை மணந்து கொண்டு அந் நாட்டின் மன்னனாக ஆசைப்படுகி றானாம். மன்னனான சந்திரப்பிரபா வின் தந்தை உடல் நலம் குன்றி படுத்த படுக்கையாகக் கிடக்கிறாராம். அவ னால் தன் மகளுக்குத் தக்க வரனைத் தேட இயலாது போனதால் அவளே தன் மனதிற்கு பிடித்தமானவனைத் தேடிக் கண்டு பிடித்து மணக்கலாம் எனக் கூறி தனக்கு நம்பகமான மந்திரி ஒருவருடன் அவளை அனுப்பி வைத் தானாம். அவள் மந்திரியுடன் அக் காட்டிற்கு வந்த போது தான் அந்த சம்பவம் நிகழ்ந்ததாம்.

இதனைத் தெரிவித்தபின் அவள் ''அந்த முரடன் எங்கள் படையில் மிகத் திறமையான வாட்போர் வீரன். அப்படிப்பட்டவனை நீங்கள் கத்தி யால் தாக்கி என்னைக் காப்பாற்றினீர் கள். இதனால் நீங்கள் மாவீரர் என்பது தெரிந்து விட்டது. மேலும் அழகா யும் இளைஞராயும் இருக்கிறீர்கள். உங்களை எனக்கு மிகவும் பிடித் துப்போயிற்று. உங்களுக்கும் என் னைப்பிடிக்கிறது என்றால் நாளையே உங்கள் வீட்டிற்கு என் ரதத்தை அனுப் புகிறேன். நீங்கள் வந்து என்னை மணந்து கொண்டு இந்நாட்டின் மன்ன னாகி எனக்கும் இந்நாட்டிற்கும் நன்மை புரியுங்கள்'' என்று வேண்டினாள்.

ஈசுவரன் அப்போது அவளிடம் அபர்ணாவைப் பற்றிக் கூறவில்லை. பெயர் பெற ஆசைப்பட்ட அவ னுக்கு அந்நாட்டு மன்னன் என்ற பெயர் கிடைப்பது எவ்வளவு பெரிய அதிர்ஷ்டம்! எனவே அவன் சந்திரப் பிரபாவிடம் ''உங்கள் இஷ்டப் படியே நடப்பதில் எனக்கு மகிழ்ச் சியே'' என்றான்.

மறுநாள் காலை ஈசுவரனின் வீட்டு வாசலில் ஒரு ரதம் வந்து நின்றது. அதிலிருந்து அரசகுமாரியும் கடா மீசைக்கார முரடனும் இறங்கி வீட் டிற்குள் சென்றார்கள். ஈசுவரனின் தந்தை அவர்களைக் கண்டு ஆச்சரியப் பட்டார். அப்போது கடாமீசைக்காரன்

''நாங்கள் உங்கள் மகன் திருமண விஷயமாக உங்களிடம் பேச வந்திருக்கிறோம்'' என்றான்.

ஈசுவரனின் தந்தையும் ''நீங்கள் யாரென்று தெரியவில்லையே'' எனவே கடாமீசைக்காரனும் ''உங்கள் மகன் மனமாற நேசிக்கும் அபர்ணா வின் சிற்றப்பா நான். மன்னரின் அவையில் பணிபுரிந்து வருகிறேன். இந்த ஊருக்கு நான் வருவது இதுவே முதல் தடவை. இவள் என் மகள் சந்திரப்பிரபா. அபர்ணா கேட்டுக் கொண்டதன் பேரில் உங்கள் மக னுக்கு ஒரு பரீட்சை வைத்தோம். இது பற்றி உங்கள் மகனும் அறிவார். ஆனால் அப்பரீட்சையில் ஒரு சிறு மாறுதல் செய்யப்பட்டதால் அதில் உங்கள் மகன் தோற்றுவிட்டார். ஆயி னும் அபர்ணா உங்கள் மகனையே மணந்து கொள்ளப்போவதாகப் பிடி வாதமாக இருக்கிறாள். அவளது பெற் றோரும் இன்னும் சற்று நேரத்தில் திருமணம் பற்றி பேச வருவார்கள்'' என்றான்.

தன் தந்தையின் பக்கத்தில் நின்ற ஈசுவரன் அதைக் கேட்டு தலை குனிந்து கொண்டான். அன்றே அவ னுக்கும் அபர்ணாவுக்கும் திருமணம் என்பதும் நிச்சயம் செய்யப்பட்டது. ஈசுவரன் அபர்ணாவைத் தனிமையில் சந்தித்து ''அபர்ணா! உன் திட்டத்தால் நான் பெரும் பெயர் பெற எண்ணி னேன். ஆனால் அது நடக்கவில்லை. நீயோ உன் விருப்பத்தை நிறைவேற் றிக்கொண்டாய். நான் தான் தோற் றேன்'' என்று மனத்தாங்கலுடன் கூறினான்.

அபர்ணாவும் ''அத்தான்! பெரும் பாலானோர் பணம், பட்டம், பதவி போன்றவற்றால் பெயரும் புகழும் ஏற்பட்டு விடும் என எண்ணுகிறார் கள். ஆனால் தியாகம் செய்வது எவ்வளவு கடினமானது என்பதை உங்களுக்குப் புரியவைக்கவே இப் படி ஒரு நாடகமாடினேன். இனிமேல் பெயர், புகழ் என்பது பற்றிக் கவ லைப்படாதீர்கள். நாம் எப்போதும் போல எளிமையாக வாழ்வோம்'' என்றாள்.

ஈசுவரனும் அப்போதே ''அபர்ணா! நீ சொல்வது தான் சரி'' என்று கூறித் தலையை ஆட்டினான்.





# கார்கால மழை

வீரபுரத்து வீரசேன மன்னனின் ராஜ நர்த்தகி வசந்த மாலை. அவள் ஆடும் அழகைக் கண்டு யாவரும் பாராட்டினார்கள். அவளது கம்பீரத் தோற்றமும், கருத்து அடர்ந்து சுருள் சுருளாக உள்ள கேசமும் யாவர் மனதிலிருந்தும் அகலாதனவாக இருந்தன. மன்னனும் அந்த நாட்டியமணியைப் பெரிதும் மதித்து வந்தான்.

இப்படி இருக்கையில் திடீரென வசந்தமாலையின் அடர்ந்த கேசம் உருக்குலைந்து போயிற்று. தலை மயிர் கொட்டி அவளது அழகையே கெடுத்தது. அவள் உடனே ராஜ வைத்தியரை அழைத்து தன் தலை மயிர் குறையாமலும் நீண்டு அடர்ந்து வளர்ந்து முன் போலாகி விடவும் மருந்து கொடுக்கும்படி வேண்டினாள். வைத்தியரும் பல விதத் தைலங்களைக் கொடுத்து கேசத்தில் தடவச் சொல்லியும், அவற்றால் எதுவும் பயன் தரவில்லை.

அப்போது ராஜ வைத்தியர் ''அம்மணீ! இனி கடவுளைத் தான் நம்ப வேண்டும். எனக்குத் தெரிந்து சடையூர் என்ற ஊரிலுள்ள சடையப்பர் என்னும் சிவபெருமானின் லிங்கம் மிகவும் சக்தி வாய்ந்தது. அதற்கு நீங்கள் ஏதாவது காணிக்கை செலுத்துவதாக வேண்டிக் கொண்டால் உங்களது கேசம் அடர்ந்து வளர்ந்து முன் போலாகி விடும்'' என்றார்.

வசந்தமாலையும் ''எனக்கு மிகவும் உயர்ந்தது என் நாட்டியமே. எனவே என் கேசம் முன் போல அடர்ந்து வளர வேண்டும். அப்படி வளர்ந்து விட்டால் நான் சடையூர் கோவிலில் நாட்டியமாடி காணிக்கை செலுத்துகிறேன். இதுவே நான் சடையப்பருக்கு செய்து கொள்ளும் வேண்டுதல்'' என்றாள்.

வசந்தமாலை சடையப்பருக்கு வேண்டுதல் செய்து கொண்ட பிறகு அவளது கூந்தலிருந்து தலைமயிர்

-கி. அருணா

கொட்டுவது நின்றதோடு அது அடர்ந்து வளர்ந்து சில நாட்களில் முன்போலாகிவிட்டது. அதனால் அவள் அடைந்த ஆனந்தத்திற்கு அளவே இல்லை. அவள் மன்னனைக் கண்டு தான் சடையப்பருக்குச் செய்து கொண்ட வேண்டுதலால் தன் கேசம் முன் போலாகி விட்டதைக் கூறி ''சடையூரிலுள்ள சடையப்பரின் ஆலயத்தில் நான் செய்து கொண்ட வேண்டுதலின்படி நடனமாட வேண்டும். அதற்கு எனக்கு அனுமதி அளியுங்கள்'' என்று கேட்டாள்.

மன்னனும் ''அந்த சடையப்பரின் லிங்கம் அவ்வளவு சக்தி வாய்ந்ததா? அப்படியானால் நானும் உன்னுடன் அங்கு வருகிறேன். அந்த லிங்கத்தை தரிசித்துவிட்டு உன் நாட்டியத்தையும் கண்டு களிக்கிறேன்'' என்றான். மறு நாளே அவர்கள் சடையூரை அடைந் தார்கள். மன்னன் ஆலயத்திற்கு வந்து சிறப்புப் பூஜை செய்வதாக இருந்த தால் அச்சமயத்தில் வேறு யாரும் ஆலயத்திற்குள் செல்ல அனுமதிக்கப்படவில்லை.

அப்போது தொலை தூரத்திலி ருந்து வந்திருந்த வள்ளியம்மா என்ற குடியானவப் பெண் ஆலயத்துள் போக முடியாதது கண்டு மனம் குமுறி ''இதென்ன அநியாயம்! மன்னன் ஆலயத்திற்கு வந்து வழிபடுவதால் நாங்களெல்லாம் அப்போது ஆலயத் துள் போகக் கூடாதா? அவரும் எங் களைப் போல மனிதர் தானே? ஆகா யத்திலிருந்தா அவர் குதித்தார்? இந்த நேரத்தில் இன்று சடையப்பரை வழி



பட்டால் கார்கால முடிவில் நான் ஆணாக முடியும். எங்கள் எருதுகள் பலம் பெற்று உழைக்கும். இந்த ஆண்டு இதெல்லாம் நடக்க விடாமல் இந்த மன்னர் நந்திபோல குறுக்கே வந்து விட்டாரே. என்ன செய்வேன்?'' என்று புலம்பினாள்.

இதைக் கேட்ட ஒரு வீரன் உடனே ஓடி ஆலயத்துள் சென்று வள்ளி யம்மா புலம்பியதை மன்னனிடம் தெரிவித்தான். மன்னனும் உடனே அவளையும் அவள் கணவனையும் அழைத்து வரச் சொன்னான். அவர்கள் வந்ததும் தன் பூஜையோடு அவர் களையும் பூஜை செய்ய வைத்தான். அர்ச்சகரும் மன்னருக்கும் வள்ளியம் மாவுக்கும் பிரசாதத்தைக் கொடுத்தார்.

அப்போது மன்னன் வள்ளியம்மா விடம் ''உன் பேச்சிலிருந்து நீ இந்த ஆலயத்திற்கு ஆண்டு தோறும் வந்து

பிரார்த்தனை செலுத்துவதாகத் தெரிகிறது. இந்தப் பிரார்த்தனை செய்வதால் நீ ஆணாக மாறுவதாயும் எருதுகள் புது பலம் பெறுவதாயும் கூறினாயாமே. அதன் பொருள் என்ன?'' என்று கேட்டான். அப்போது அவளது கணவன் குறுக்கிட்டு ''இவள் ஏதோ உளறுகிறாள்'' எனவே மன்னன் ''இல்லை. இவள் கூறியதில் ஏதோ உட்பொருள் இருக்கிறது. அதைச் சொல்'' என்று கேட்டான். அப்போது வள்ளியம்மையின் கணவன் ''ஆம். நாங்கள் சடையப்பரை இன்று வழிபடுவதால் சடையப்பர் தம் சடைகளை அவிழ்த்து கங்கையை விட்டு மழை பெய்ய வைக்கிறார். மழை காலம் முடிந்ததும் பயிர் அறுவடைக்குத் தயாராகி விடும். கதிர் அறுக்க என் மனைவி ஆண் பிள்ளை போல வயலில் வேலை செய்வாள். எருதுகளும் அப்போது உலர்ந்து வரும் வைக்கோலைத்தின்று புதுப்பலம் பெறும். இதைத்தான் அவள் மனதில் நினைத்துக் கொண்டு அவள் கூறினாள். சடையப்பரை இப்போது வேண்டினால் நல்ல மழை பெய்து நல்ல விளைச்சல் ஏற்படும் என்பது எங்களது நம்பிக்கை'' என்றான்.

மன்னனும் ''பேஷ்! ஒவ்வொருவருக்கும் ஏதாவது ஒரு நம்பிக்கை இருக்கும் உங்களைப் போலவே என் சபையில் நடனமாடும் வசந்தமாலைக்கும் இந்த சடையப்பர் மீது நம்பிக்கை ஏற்பட்டது. அவளது தலைமயிர் கொட்டி கேசத்தின் அழகு குன்றவே, அவள் தன் கேசம் முன்போல வளர்ந்தால் இக்கோவிலில் நடனமாடுவதாக வேண்டுதல் செய்தாள். அவளது கேசம் வளர்ந்து முன்போல் ஆகி விடவே இன்று இங்கு நடனமாடப் போகிறாள். நீங்கள் இருவரும் என்னோடு இருந்து நடனத்தைப் பாருங்கள்'' என்றான்.

நடனம் முடிந்ததும் மன்னன் வசந்தமாலைக்குப் பரிசளித்ததோடு வள்ளியம்மாவுக்கும் அவளது கணவனுக்கும் பரிசுகளைக் கொடுத்து அனுப்பினான்.





# உண்மை இது தான்

மலயகிரியை மாதவசேனன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது நாட்டில் இலக்கியம், கலைகளென எல்லாம் நன்கு வளர்ச்சி பெற்றன. அவன் பண்டிதர்களையும், கலைஞர்களையும் ஆதரித்துப் பரிசளித்து கௌரவித்து வந்தான். ஒரு நாள் நீலகண்டர் என்பவர் வேறு நாட்டிலிருந்து வந்து மாதவசேனனைக் கண்டார். அவர் ஒவ்வொரு நாட்டிற்கும் போய் அங்கு ஒரு வருடம் இருந்து அந்நாட்டின் மொழியைக் கற்று அந்நாட்டின் வரலாற்றை எழுதி விட்டு அடுத்த நாட்டிற்குச் செல்வார்.

அவரைப் பற்றி மாதவசேனன் நல்ல விதமாக நிறையக் கேட்டிருந்ததால் அவரை வரவேற்று ''நீங்கள் என் நாட்டிலும் தங்கி ஒரு வருடகாலம் இருந்து இந்த நாட்டின் வரலாற்றையும் எழுதுங்கள்'' என்றான். நீலகண்டரும் ''ஆகா! அப்படியே செய்கிறேன். ஆனால் என்னைத் தங்களது சொந்த விஷயங்களை கவனிக்கும் உதவியாளனாக நியமித்துக்கொள்ள வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார். மன்னனும் அவர் கேட்டுக் கொண்டபடியே தன் அந்தரங்க உதவியாளராக நியமித்து விட்டார்.

அது முதல் நீலகண்டர் எப்போதும் மன்னருடன் இருந்து வருவதை யாவரும் கண்டார்கள்.

மன்னருக்கு மிகவும் நெருக்கமானவர் நீலகண்டர் என்பதைக் கண்டு யாவரும் அவருக்கு மிகுந்த மரியாதை காட்டினார்கள். நகரத்துப் பணக்காரர்களும் வியாபாரிகளும் அவரை அழைத்து விருந்தளித்தார்கள். அவர்களது நோக்கம் அவர் வாயிலாக மன்னனிடமிருந்து சலுகைகள் பெற்று லாபம் அடைவது தான்.

நீலகண்டர் மலயகிரிக்கு வந்து ஓராண்டு காலம் முடியும் தறுவாயில்

எஸ். சங்கரராம்



இருந்தது. அவர் எழுதிக் கொண்டிருந்த மலயகிரியின் வரலாற்று நூலும் முடிய இன்னும் ஓரிரு அத்தியாயங்களே இருந்தன. அந்த முடிவு பெறாத வரலாற்று நூலை மாதவசேனன் நீலகண்டரிடமிருந்து வாங்கிப் படித்துப்பார்த்தான். அதில் நாட்டின் பழக்கவழக்கங்கள், நடை, உடை, பாவனைகள், பிரமுகர்கள், ஆட்சிமுறை, மொழி என எல்லாவற்றையும் பற்றிய விவரங்கள் இருந்தன.

அதில் ''இந்நகரமக்கள் அப்பாவிகள். மன்னர் நேர்மையானவர். அரசாங்க அதிகாரிகளும் மன்னருக்கு விசுவாசமாக இருக்கிறார்கள். ஆனால் நகர வியாபாரிகளும் பணக்காரர்களும் முறையற்ற வழிகளில் பணம் சம்பாதித்தும் மோசடிகள் செய்தும் வருகிறார்கள்'' என்று இருந்ததைப் படித்து மன்னன் கோபம் அடைந்தான். அவன் நீலகண்டரை வரவழைத்து ''உங்கள் வரலாற்று நூலில் அநேகமாக எல்லாம் சரியாகவே இருந்தாலும் இந்நாட்டு வியாபாரிகளையும், பணக்காரர்களையும் பற்றி எழுதியுள்ளது மட்டும் உண்மை அல்ல'' என்றான்.

நீலகண்டரும் ''அப்படியா? தவறாக இருப்பனவற்றைத் திருத்தி எழுதி விடுகிறேன்'' என்று சொல்லி விட்டுச் சென்றார். மறுநாள் அவர் பெரும் பணக்காரர்களையும் வியாபாரிகளையும் சந்தித்து ''மன்னர்சக்கரவர்த்திக்கு மிகப் பெரிய கப்பம் கட்ட வேண்டுமாம். உங்களிடமுள்ள விலையுயர்ந்த பொருள்களைக் கொடுங்கள்.'' என்றார். அவர்களும் தங்களிடமிருந்த நவரத்தினங்களையும் தங்கத்தையும் கொடுத்தனர். மன்னனின் அந்தரங்க செயலாளரானதால் அவர் கூறியதை அவர்கள் நம்பிவிட்டார்கள். தாம் எழுதிய ஜாபிதாக்களில் கையொப்பம் போட்டும் கொடுத்து ஒரு நகலும் வைத்துக் கொண்டார்கள்.

அதற்கு அடுத்த நாள் காலையில் நீலகண்டர் இரவோடு இரவாகத் தலைமறைவாகி விட்டார் என்ற செய்தி பரவியது. உடனே நீலகண்டருக்கு நவரத்தினங்களையும், தங்கத்தையும் கொடுத்த பணக்காரர்களும் வியாபாரிகளும் மன்னனிடம் போய் நீலகண்டர் தங்களை ஏமாற்றிப் பணம் பறித்துக் கொண்டு போய்

விட்டதாகப் புகார் கூறவே மன்னனும் ''நான் பணம் வசூலிக்கச் சொல்ல வில்லையே. உங்களுக்கு ஏற்பட்ட நஷ்டத்தை நான் ஈடு செய்கிறேன். ஒவ்வொருவரும் அவரிடம் என் னென்ன கொடுத்தீர்கள் என்பதைப் புகார் மனு வில் எழுதிக் கொடுங்கள்'' என்றான்.

அவர்கள் கொடுத்த மனுக்களை எல்லாம் மன்னன் தன் பொக்கிஷ தாரரிடம் கொடுத்து ''இவற்றின்படி நம் பொக்கிஷத்திலிருந்து கொடுக்க எவ்வளவு ஆகும்?'' என்று கேட் டான். பொக்கிஷதாரரும் கணக்குப் போட்டுப் பார்த்து விட்டு ''இவ்வ ளவு தொகை நம் பொக்கிஷத்தில் இல்லை'' என்றார்.

அப்போது நீலகண்டர் ஒரு பெரிய மூட்டையுடன் வந்தார். அதனை அவர் மன்னனிடம் கொடுத்து ''இதில் வியாபாரிகளும் பணக்காரர்களும் கொடுத்தவை யாவும் உள்ளன. அவர் கள் கையொப்பமிட்டுக் கொடுத்த ஜாபிதாக்களும் உள்ளன. அவற்றின் படி அவரவர் நவரத்தினங்களையும் தங்கத்தையும் அவரவர்களுக்கே கொடுத்து விடுங்கள்'' என்றார்.

அவர்கள் கையொப்பமிட்டுக் கொடுக்கப்பட்ட விவரங்களுக்கும் புகார் செய்யப்பட்ட மனுவின் விவ ரங்களுக்குமிடையே பெரும் வித்தி யாசம் இருக்கவே, மன்னன் அவர் களை உடனே வரச் சொன்னான். மன் னனுடன் நீலகண்டர் இருந்ததைப் பார்த்ததும் வந்த வியாபாரிகளும் மன்னனின் கால்களில் விழுந்து ''எங்களை மன்னித்து விடுங்கள். நாங்கள் இவரிடம் கொடுத்ததைப் போலப் பன்மடங்கு கொடுத்ததாகப் பேராசை கொண்டு புகார் மனுவில் எழுதிவிட்டோம்'' எனக் கூறினார்கள்.

மன்னனும் நீலகண்டரிடம் ''நீங்கள் வரலாற்று நூலில் எழுதியது முற்றிலும் உண்மை. அதை நிரூபிக்க நீங்கள் இவ்வளவு சிரமப்பட்டிருக்கி றீர்கள்'' என்று கூறி நீலகண்டருக்கு ஏராளமான பரிசுகளை அளிக்கவே, அவரும் அவற்றைப் பெற்றுக் கொண்டு அந்நாட்டிலிருந்து வேறொரு நாட்டிற்குச் சென்றார்.







# போட்டோ வாக்கியப் போட்டி





**இந்த போட்டோக்களுக்கு ஒவ்வொரு சொல்லாலோ, அல்லது சிறு வாக்கியங்களாலோ தொடர்புடையதாக எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/-

போட்டி முடிவு ஏப்ரல் 2002 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா,
எண்: 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

வாழ்த்துக்கள்

டிசம்பர் 2001 இதழில் வெளியிடப்பட்ட
போட்டியில் வெற்றி பெற்றவர்:
டி. எஸ். பாலு
115, பாரதியார் தெரு,
சிவகாமி நகர், கௌரிவாக்கம்
சென்னை-601302

பரிசு பெற்ற வாக்கியங்கள்





மலரத்துடிக்கும் மொட்டு
மலர்ந்து சிரிக்கும் சிட்டு

அம்புலிமாமா வருட சந்தா :

இந்தியாவில் ரூ.120/-

Payment in favour of CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

